உ



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பணவிடு தூது.



மகாமஹோபாத்யாய, டாக்டர்
உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம்

சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1908.

விலை அணா 2.

கணபதிதுணை.

# பணவிடுதூது.

---

## காப்பு.

### நேரிசை வெண்பா.

வெல்லுந் திறன்மாதை வேங்கடே சேந்திரன்மேற்
சொல்லும் பணவிடு தூதுக்கு - வல்லவொரு
கம்பகும்பத் தானையன்று கைக்கழங்கு போலாடுங்
கம்பகும்பத் தானைமுகன் காப்பு.

## நூல்.

### கலிவெண்பா.

பாரதந்தவேதன்பதுமமுகத்துதித்த
சீர்தந்ததெய்வத்திருக்குலத்தான் - ஏர்தந்த

முப்புரிநூன்மார்பினுன்முதலகெல்லாம்விளங்குஞ்
சுப்ரமண்யபிம்பமன்னசோதியான் - ஒப்பில்

உபயகுலோத்துங்கனுண்மையரிச்சந்த்ரன்
அபயனகளங்கனனகன் - சபைநிறைந்த

போஜனளகேசன்பூச்சக்ரவாளமனு
ராஜவிஜயரகுராமன் - விசுபுகழ் (௪)

மாருடபரணன்வரிசைத்துரைப்பெருமான்
நானுகலைதெரிந்தநாகரிகன் - மீனவன்றன்

மண்டலமுஞ்சோழவளமண்டலமுந்தான்கவித்துக்
கொண்டதனிக்கொற்றக்குடையினான் - வெண்டாள

வாபரணமாமுலையார்க்காசைவலைபூட்டுகழைச்
சாபமதரூபசௌந்தரியன் - கோபாலன்

செம்பொனடிவணங்குஞ்சென்னியான்வேற்றரசர்
பைம்பொன்முடிவணங்கும்பாதத்தான் - விம்பமணிக்

கங்கணமுமேற்போர்கலிகளெல்லாந்தீர்ப்பனென்ற
கங்கணமுநீங்காக்கரதலத்தான் - சங்கையுள்ள

வெஞ்சொற்களைந்துகல்விமேலோரெடுத்தியம்புஞ்
செஞ்சொலுகந்ததிருச்செவியான் - விஞ்சுபொருங்

கல்விக்கடலனையான்கண்டோர்பசிதீர்க்குஞ்
செல்வக்கருணைத்திருமுகத்தான் - மெல்லப்

புடைபரந்ததெள்ளமிர்தம்போற்கருணைவெள்ளங்
கடைபரந்தசெங்கமலக்கண்ணான் - புடைசென்

றடுத்திட்டபேர்க்குமயலார்க்குமுண்மை
நடுத்திட்டமேயுரைக்குநாவான் - எடுத்தமத

வோங்கலிருநான்கும்பொறையுயிர்ப்பவொண்புவனந்
தாங்கவளர்ந்ததடம்புயத்தான் - நீங்கா

இடும்பைக்கொடுங்கலிதீர்த்தெண்ணில்பலகோடி
குடும்பப்பிரதிஷ்டைசெய்தகோமான் - அடும்போரில் (௧௫)

வானெதிர்த்தமேருமலைவாகெதிர்த்தாலும்
தானெதிர்த்துவெல்லுந்தனுவிஜயன் - சேனைத்

தளங்கும்பிடக்கனகதண்டிகையூர்ந்தாலும்
விளங்குந்தனிப்புருஷமேரு - வளம்பெறுமித்

தேசவிவகாரஞ்சேர்க்கத்திறலுள்ளசெய்திதுரை
வாசல்விவகாரமற்றெவையும் - போசனமெய்ப்

மந்திரிமாருமறுமன்னரேவலரும்
தந்திரிமாருந்தளாதிபரும - முந்தும்

தினசரிக்காரர்களுஞ்சீமைக்கணக்கங்
கனுதினம்வாசிக்குமவரும் - கனமுடைய

வர்த்தகருங்கூர்ச்சரருமாராட்டருங்கொலுவில்
தத்தம்வரிசைகொடுதாநிற்ப - நித்தமொரக்கச்

சாளிகைகட்டிவைக்குந்தந்திரமும்பிந்திவரும்
பாளையக்காரர்பணங்களுக்கும் - காளமுப்பும

வல்லமையுங்கேட்குப்வரியோலைக்குத்தாங்கள்
சொல்லுவதிலேநினைவின்சூக்ஷமமும - எல்லைகண்டு

கூறப்படாதகுளப்பாய்வங்காற்பாய்வும்
வறப்பயிர்கொளுத்துமேற்பாடும் - பேறுதரும்

தேவாலயத்திற்றினப்பூசைதப்பாமல்
சேவாளனுப்பும்விசாரிப்பும் - நேர்வாகக்

காணிக்கைக்காரர்கணக்குக்கேட்டவ்வவர்த்
தாணிக்குத்தக்கதிட்டஞ்செய்வதுவும் - பாணிக்குநர் (௨௬)

பொய்யுநயபயமுஞ்சேருஞ்சனங்களுக்கென்
னையன்புரியுமரவணைப்பும் - வையகத்தில்

மற்றொருவருக்குவருமோவராதென்று
சொற்றவரெல்லாமெடுத்துக்கொண்டாட - முற்றும்

திருவடிதேசமொருசெங்கோல்செலுத்தும்
பருவமெல்லாநன்றாப்பழகி - ஒருமுகங்கொண்

டபட்டவணையிட்டதுபோலத்தனையுந்தானிருந்து
சட்டமிடுகின்றசமுகத்தான் - தொட்ட

நிலைபானமேருநிகரானநேரி
மலையானங்கியாதுமலையான் - உலகுய்யத்

தோற்றினன்றன்னளியாற்சொற்பாவலர்கலிவெப
மாற்றினன்காவேரியாற்றினன் - நாற்றிசைக்கும்

காட்டினன்றன்புகழைக்கற்றோர்குடும்பநிலை
நாட்டினன்சோழவளநாட்டினன் - ஈட்டும்

நிதியான்மிகுத்தநிறைவாழ்வளகைப்
பதியாந்தென்மாதைப்பதியான் - அதிர்திரைப்பால்

வேலையான்போற்கருணேமேன்மையானவலர்பா
மாலையான்றாமரைப்பூமாலையான் - பாலெலினத்

தேசியானின்றசெகங்காத்தருளமரர்
வாசியான்பொற்கவனவாசியான் - நேசமிலா

வஞ்சரைத்தான்சற்றுமதியானுததிகுடிக்
குஞ்சரத்தான்வெற்றிமதகுஞ்சரத்தான் - விஞ்சும் (௩௯)

படியானதுபுகழும்பான்மையான்மீனக்
கொடியான்வெள்ளன்னக்கொடியான் - வடிவே

லரசானவெற்றியாஞலைமதனோடு
முரசாயதிர்மும்முரசான் - பரசுமனு

நீதிபெறுமுத்ரைநிருபங்கோபாலனென
ஆதிமுதலொப்பமிடுமாணையான் - பூதலத்தில்

திக்கெல்லாம்வந்துதிறையளக்குஞ்செங்கோன்மைச்
சொக்கநாதேந்த்ரதுரந்தரிகன் - முக்யமுள்ள

பூசுரர்க்குத்தானமிட்டும்பூசைபலசெய்துமிந்தத்
தேசமுற்றுங்காக்கவந்துசென்மித்து - ராசரிக

முத்ரைபெற்றரங்ககிர்ஷ்ணமுத்துவீரேந்த்ரனருள்
வைத்தகொற்றவாசலுக்கோர்மந்திரியாய் - மொத்தந்

கணக்கைவகைகண்டுகற்பித்தபொக்ஷப்
பணக்குறைவாராமற்பணித்து - வணக்கமிலாக்

கூடலூர்க்கம்பைமுதற்கொண்டுமலையாள
நாடளவுமாணைநடத்துவித்துப் - போடுகின்ற

விட்டுவரியெப்பொழுதும்வேண்டாமெனநிறுத்திக்
காட்டுவழிச்செல்வாரைக்காப்பாற்றி - ஆட்டுபுனற்

கங்கைநதிமுதலாக்கன்னித்துறைவரைக்கும்
எங்கணுமின்றெனன்றிலக்காக்கச் - சிங்களவர்

மச்சரிலாடர்மகதர்கலிங்கத்தர்
குர்ச்சரர்கோசலர்கொங்கணர் - உச்சினர் (சஅ)

மாகதர்பூர்வசிகாரியாளர்
கேகயபாரியர்கோளத்தர் - ஓகைபெறும்

வங்கர்கலிங்கர்மராடர்கருநாடர்
கொங்கர்குசலர்குமாரெருங்க - எங்கும்

நிறைகொலுவாய்த்தானிருந்துநீதிமனுவாகித்
திறைகொணர்ந்தவேந்தர்தினமும் - முறைமுறையே

தெண்டனிடும்வாசற்றிருவேங்கடநாத
மண்டலிகன்பெற்றவரபாலன் - பண்டைநாள்

ஆதிசுப்ரமண்யராமரர்சிறைமீட்கவந்தச்
சோதிமயவடிவாய்த்தோன்றியபின் - நீதிதிகழ்

ஆறுமுகம்வெவ்வேறவதாரமாகியிந்நாள்
வீறுபுவிகாக்கவந்தமேன்மைபோல் - பேறுமிகத்

தன்னுடனேயைவர்சகோதரருந்தானுமெழின்
மன்னவர்சிகாமணியாய்வந்தபிரான் - மின்னும்

மருக்குங்குமமார்பன்மார்க்கண்டவாழ்வாய்
இருக்குந்துரைவெங்கடேசன் - பெருக்கமுள்ள

தேசப்ரதானமெனுந்தென்மதுரைவீட்டுக்கு
வாசற்ப்ரதானிமகாராசன் - ராஜரீக்க

கிம்புரிமால்யானைசொர்ணகிர்ஷ்ணபூபாலனுக்குத்
தம்பியெனவந்ததயாளுவாய் - அம்புவியில்

எண்ணெண்கலாஞானமெல்லாந்தெளிந்தமணி
வண்ணப்பெருமாள்மகிபதியும் - தண்ணளியால் (௫௬)

தேசமோராணைகொண்டுசெங்கோன்மைசெய்யவந்த
ராஜகோபாலநராதிபனும் - நேசமிகு

துங்கனகளங்கன்றலங்குகனகாவியப்ர
சங்கன்கனகசபாபதியும் - இங்கிதஞ்சேர்

திங்கட்டிருமுகத்திற்செங்கமலைகூத்தாடும்
வெங்கட்டராமவிதரனும் - இங்கிவர்கள்

பின்னுதித்தநால்வர்பிராணபதத்தம்பியரா
முன்னுதித்துவந்தமுகூர்த்தவான் - மன்னுமர

விந்தமலரோனின்றவிப்ரகுலதீபமென
வந்தவெங்கடேசமகிபாலன் - சந்ததமும்

தாய்த்துணைபோலெங்கள்தமிழ்ப்பாண்டிநாடாள
வாய்த்தவெங்கடேசமகிபாலன் - வேய்ந்தடந்தோள்

தேனனையசொல்லியர்க்கோர்சீவகசமானவெகு
மானவெங்கடேசமகிபாலன் - தானுகந்து

முத்தமிழ்வாணர்க்குண்முழுநோக்கமென்னிடத்தில்
வைத்தவெங்கடேசமகிபாலன் - புத்தமுத

சீதசந்த்ரபிம்பத்திருமுகத்தான்செய்யதமிழ்
மாதைதவெங்கடேசமகிபாலன் - பூதலத்தை

ஏகசக்ரமாப்புரக்குமிராஜதானிக்கிணங்கும்
பாருபெற்றநெல்வேலிப்பட்டணத்தில் - ஓதையுடன்

மேலாமரண்மனைக்குண்மேவிக்கொலுவிருந்து
மாலைபுதுந்துவரும்வேளை - நாலுதிக்கும் (எ0)

கட்டியங்களார்ப்பக்கரடமதயானையின்மேற்
கொட்டியடமாரங்கள்கோஷிப்ப - எட்டிப்

பேரிமுழங்கப்பெரியபதினெட்டுவகை
ஊரிநெடுவாத்தியங்கண்முன்னதிர - நேரே

நடனாடகசாலைநட்டுவன்மார்தாளத்
துடனேசங்கீதமொலிக்கப் - புடையே

அருவிவல்லயத்திலமுழந்துபசுந்தங்கம்
இருபுறமுமின்னிட்டெடுப்பத் - தெருநிறையக்

கொஞ்சிவருமச்சிக்குதிரைகணிர்த்தம்புரியச்
சஞ்சுபவர்க்கந்தளதளென - மிஞ்சும்

இருளறுதீவட்டிகளெண்ணிலமுன்செல்ல
மருவுபலதீவேட்டுவர்க்கம் - பொருவில்

பக்லவர்த்தியித்தனையும்பக்கநெருங்கி
இகலிட்டிரவுபகலேய்ப்பத் - தகுமுபய

சாமரைகள்வீசத்தமனியப்பொற்பாவாடை
காமருபொற்காளாஞ்சிகைக்கொண்டு - கோமளமாச்

செல்வார்வரிசைகொடுசெம்பொற்பணியிலங்க
வில்வாள்பரிசையொடுவேண்டுவன - பல்வகையாம்

ஆயுதக்காரராளவிலர்முன்னேநடக்கத்
தூயபலதண்டிகைகள்சூழ்ந்துவர - நாயகமாய்த்

தங்கமுமுத்துந்தனிப்பவளராசியுமே
எங்குமொளிவிட்டெழிப்பதாய் - ரங்ககிர்ஷ்ணன் (௮௧)

முத்துவிரேந்த்ரன்முழுவரிசைதந்தனுப்பும்
கொத்துமணித்தண்டிகைமேற்கொண்டேறிச் - சித்தம்

விரும்பியளகேசன்போல்வீதிவலம்வந்துத்
திரும்பியரமனைக்குட்சென்று - பெரும்பார்க்

கிறையவனெங்கோமானிரங்கவிலாசத்தே
நிறைகொலுவாய்வீற்றிருக்குநேரம் - நறைமலர்ப்பூங்

கொத்தலர்தார்மார்பன்கொலுவிருக்குஞ்சிங்காரம்
அத்தனையுங்கண்டேனகங்குளிர்ந்தேன் - மெத்தமெத்த

போசன்சமுகம்பொலிவென்பார்மாதைநவெங்க
ளேசன்சமுகத்துக்கீடாமோ - ராசர்பலர்

கூடுஞ்சமுகங்குறையாதுலகக்ஷேமிகூத்
தாடுஞ்சமுகமதுவன்றோ - தேடுகின்ற

வாக்கில்வியாழமிங்குவந்ததென்றுலோகமெல்லாம்
காக்குமெசமானெதிர்போய்க்கையெடுத்தேன் - பாக்ய

துரந்தராவன்னசத்ரசோமகபுவன
புரந்தராமெய்ஞ்ஞானபோதா - நிரம்புகொடைக்

கன்னுகவிக்குக்கனகாபிஷேகஞ்செய்
மன்னுசவுந்தரியமன்மதா - பொன்னாரம்

பூட்டியமார்பாபுசபெலவிமாவிசயா
நீட்டியவேற்கைச்செயதுங்கா - நாட்டியதோர்

யாகாதிகர்மமியற்றியிமையோர்க்கும்
ஆகாரநல்குமபிராமா - யோகமனோ (௬௭.)

ஸ்ரீராரணதுங்கசெந்தமிழோர்துன்படரி
காராவணவரதகல்யாணா - பாராளும்

பணபாரமென்றுமகாராசன்கீர்த்தியென்னால்
ஆனதுமாத்திரங்கொண்டாடினேன் - தானும்

இருங்கைதனைநீட்டித்திரள்சமுகந்தன்னில்
இருக்கைதமகிழ்ச்சியுடனீந்தான் - உருக்கியெங்கோன்

தன்னுடையசித்தந்தேசந்தோஷங்கைமீற
என்னுடையவண்ணமரங்கேற்றுதலும் - மின்னுமுழு

நீலமொன்றுகைக்குநிறைந்தகணையாழி
சாலுவைசெம்பொற்சரப்பணியும் - மேலும்

விரும்புபலபூஷணங்கண்மிக்ககட்டுவர்க்கம்
அரும்பரிசிலத்தனையுந்தந்து - திரும்பவுமென்

பாமாலைபெற்றவிலைக்குப்பதின்மடங்காச்
சீமான்கொடுத்ததிரவியமே - நாமம்

பணமேயெனப்படைத்தயாக்கியவானேவங்
கணமேயென்றுயிரேகண்ணே - குணநிதியே

சாம்பநிதிரத்துஞ்சாளக்கிராமத்தும்
மேம்படுசித்தாதிகள்செய்வித்தையிலும் - தேம்பொழியும்

பன்றிமலையிலுநீபண்டிருந்தாயங்கு
நின்றுலகமெங்குநிறைந்திட்டாய் - ஒன்றுகேள்

ஈனனுனக்கொப்பென்பாரீசனையுண்டாக்கியவன்
பூசனைநீசெய்விப்பாய்புண்ணியா - பேசுங்கால் (கoக)

மூவர்கடவுளர்கள்மூவரிலொன்றானதனித்
தேவன்மகிமைதனைச்சென்றேத்தற் - காவதுபோல்

சின்மயமாமுன்னுடனேசெம்புவெள்ளிசேர்ந்தாலும்
உன்மயமேயெங்குமுயர்ச்சிகாண் - பொன்மகளை

மார்புதனின்மாயோன்வரிசையாவைத்ததுநின்
பேர்மகிமைகண்டாய்பெரியோனே - பாருலகில்

ஆன்றபலகோடியாத்மவர்க்கமத்தனையும்
ஈன்றபிரமனுநீயீன்றமகன் - தோன்றுபொரு

நற்பொருளுண்டாங்கவன்றனையிரணிய
கெற்பனென்றுசொல்வதுநான்கேட்டிலனோ - கற்பனையால்

ஆங்கவனுண்டாக்குமகிலாண்டகோடியெல்லாம்
தாங்குமகமேருவுநீதானன்றோ - நீங்கின்றி

மன்றன்கரம்வளர்த்திரக்ஷிக்குங்காந்திமதிப்
பெண்ணமுதாயிருக்குந்தலம் - அண்ணலே

முத்திமயமாமுழுச்சிமயவெற்பென்பார்
அத்தமலையுன்றன்மயமல்லவோ - எந்தையார்

முந்தப்பதஞ்சலிக்குமுன்னின்றுகூத்தாடும்
அந்தக்கனகசபையார்வடிவம் - நிந்தையிலா

உன்மயமேசொல்லவொருகோடிநாள்செல்லும்
என்மனதில்வந்ததியம்புவேன் - நன்மைதரும்

பல்லங்கிக்காசுபழையசம்பங்கிக்காசு
புல்லவட்டக்காசுபுலக்காசும் - அல்லாமல் (௧௧௪)

சந்தபிக்காசுதருசூனுத்தான்காசுமுதல்
அந்தமோடாளிட்டான்காசென்றும் - செம்பீஇ

குருகுபவளக்காட்டினுள்ளவராகன்
வருபிரதிபுஸ்யவராகன் - பெருகுமொரு

சென்னபட்டணத்தான்சிவராயன்மம்மதுகான்
மன்னுநிசானிவராகனுடன் - சொன்னகிரிச்

சீரங்கராயனெனுஞ்செம்பொன்வராகனிவர்
பேரெங்குமானபெரியோர்கள் - சேர

உனக்குமுன்னேதோன்றுமுயிர்த்துணேவரென்றால்
மனக்கவலேயேதுனக்குமன்னு - கனக்கும்

குதிரைக்குளம்புகுடிக்கல்லாரபா
அதிகக்கிளேக்கூட்டமாநுய் - நிதியக்

கடவுளேயாங்கவர்க்குக்காவேரிகங்கைக்
கிடையினுள்ளதேசமெனவையும் - அடையில்

நிரைபெறுதீவாந்தரமுநின்னயமாமேழு
கரைதுறையுநீகொடுத்தகாணி - துரைமகனீ

அங்குமிங்கும்போக்குவரத்தாயிருப்பாயாங்கவரும்
இங்குமங்கும்போய்வாதிருப்பார்கள் - உங்களிமீல

பேதமுண்டோவாசற்பிரதானிபுத்தனுக்கும்
ஏதமிலாநற்பன்னிராசிக்கும் - போத

மலேயாளதேசமணியங்கொடுத்தாய்
தலேயாகநீயிருக்குந்தானம் - தொலேயாத (கஉ௫)

தென்மதுரைச்சிமைமுதற்றென்கன்னியூர்வரைக்கும்
நன்மதுரைநீயேசகலருக்கும் - தொன்முறையால்

வல்லதுட்டுறுக்காணிவாசற்றளகர்த்தர்
செல்லுமற்றைக்காசெல்லாஞ்சேவகர்கள்-எல்லாரும்

அங்கங்கேநாணயங்களாகவைத்தாயுன்றனை
எங்கெங்கேசெல்லாதிரையோனே - எங்களுக்குத்

தாதையும்பெற்றெடுத்ததாயும்போலாதரிக்கும்
மாதைவெங்கடேசேந்த்ரன்வாசலிலே - சீதமலர்ப்

பைந்தொடியாள்கூத்தாடும்பாக்யநிறைபொக்ஷமுனக்
கந்தரங்கமானவரசிருக்கை - சொந்ததலம்

அத்தலமேயானுலுமஷ்டதிக்குநீயாகி
எத்தலமுஞ்சட்டமிடுவிப்பாய் - கர்த்தனே

கொங்குமுளையென்றுங்குணுங்கலூர்வெட்டென்றும்
வெங்கணழகாத்ரிவெட்டென்றும் - தங்குமொரு

நூற்றுக்குடியான்சுழிமுல்லாவெட்டென்றும்
வேற்றுச்சடக்கனிட்டவெட்டென்றும்-தோற்றுபுது

வெட்டென்றுஞ்சோழியன்றன்வெட்டென்றும்ராமசந்த்ரன்
வெட்டென்றுமெம்பெருமான்வெட்டென்றும்-திட்டமாம்

மல்லன்சிகாபதியான்வாழ்குருகன்வெட்டென்றும்
வெல்லுமிராமையன்வெட்டென்றும்-சொல்லுமொரு

கொப்பரைவெட்டுக்குறுநண்டுக்கால்வெட்டு
மெய்ப்புளகாரேட்டிவெட்டென்றும்-செப்பியமைக் (கரு.ரு)

காட்டுவெட்டுமத் தகிரிக்கண்டிராயன் றிருவாங்
கோட்டுமின்னன்மாற் றுக்குறைச்சலென் றும்-காட்டுகின்ற

வெந்துருகல்கோழிவிழுங்கலிருப்பூறல்
செந்தழுலில்வேஞ்சுத்தசேவையென் றும்-அந்தமிலாக்

கள்ளன்புதுமங்கலக்குடியான்செப்பாடல்
புள்ளறுதல்வேவல்புழுங்கலென் றும் - வெள்ளியிற்பொழ்

பூர்சென் றும்பூச்சையநாய்க்கன்பணமென் றும்
தேய்ச்சவுரையென் றுமுழுச்செம்பென் றும்-வாய்ச்சபழ

முந்தினவெட்டென் றுமூர்த்திசெட்டிவெட்டென் றும்
விந்தைதமயிலாப்பூர்வெட்டென் றும் - சந்தேகம்

அச்சழிவுவீரராயன்பணமாண்டான்வெட்டோ
டுச்சிதமாமோசைப்பணமென் றும்-இச்சம்மான்

தன்னுடையவெட்டென் றுஞ்சங்கரசெட்டிபுது
மின்னலென் றுநாகப்பன்வெட்டென் றும்-மன்னுகட

னஞ்சையப்பன்வெட்டுளிச்வநாதசெட்டிவெட்டென் றும்
மிஞ்சுகின்னராவுத்தன்வெட்டென் றும்- அஞ்சிறுகோ

பாலசக்ரமென் றும்பலவுளுந்தூர்ச்சக்ரமென் றும்
சால்புதிருவையாற் றுச்சக்ரமென் றும் - மேலாம்

திருச்சிராப்பள்ளிச்சிறுசக்கிரமென் றும்
வரிசையாய்ப்பாரில்வழங்கித் - தெரிசிக்கும்

கோலம்பலவெடுத்துக்கோவேஙீசெய்யுமித்ர
சாலம்பிறரறியத்தக்கதோ - ஞாலமிசை (கஅ)

மேருவணுவாக்கிவிடுவாயணுவையொரு
பாரமகமேருவெனப்பண்ணுவாய் - ஈரமின்றி

வெட்டுவாய்வெட்டுந்தலைமீட்பாய்வரிக்கிறுகக்
கட்டுவாய்கட்டுங்கயிறவிழ்ப்பாய் - கிட்டும்

உறவிற்பகைவிளைப்பாயுட்பகையாம்பண்டைக்
குறையைத்தவிர்த்துறவுகொள்வாய் - துறைவிட்டுக்

காடுநாடாக்குவாய்கண்விழித்தூறமுமுன்னே
நாடுகாடாக்குவாய்நம்பிநீ - தேடுங்கால்

வாராய்வலியவருவாய்வந்தாலுமுன்பின்
பாராய்பரிட்டவணைபண்ணுவாய் - நேராய

ஓடுவதுஞ்சொல்லாமலோடுவாய்செப்பிலிட்டு
மூடுவதுங்கண்டுமுடியாதே - தேடிப்

புதைத்திறந்துமற்றொருவன்போனாலொருவன்
அதைத்திறந்துபார்க்கவனுமி - வதைத்திறந்தோர்ப்

தாடுபலிகொடுத்துமஞ்சனங்கள்போட்டுமதிற்
பீடுபெறும்பேயைப்பிடித்தடைத்தும் - பாடுபட்டுத்

கண்டாலுங்கல்லாய்க்கரியாய்க்கிடப்பையுனக்
குண்டானசாலமெவர்க்குண்டுகாண் - மிண்டுபண்ணி

வெட்டியெடுத்துன்னைவிட்டுக்குள்ளேபொதுங்கத்
தட்டுதராசுசெப்புதன்னிலிட்டுக் - கட்டுடனே

காத்தாலுநீயடங்காய்கள்ளா! வெளியினின்று
கூத்தாடுவாயிதென்னகோட்டாலை - சித்துவபாய் (௫௮)

வாழ்வதுவுமுன்னுடையவாழ்வாமேவாழ்வொழித்துத்
தாழ்வதுவுமுன்னுடையதாழ்வாமே - கூழ்குடித்துக்

கட்டப்புடைவையின்றிக்கந்தையுமாய்ச்சென்றுசெல்வர்
இட்டப்பலகாலுங்கெஞ்சிப்போய் - முட்டமுட்டத்

தாங்குவாரற்றுத்தடுமாறிராப்பகலாய்
ஏங்குவாரேக்கமுமுன்னேக்கமே - ஓங்கும்

பணமென்னுமுன்னைப்படைக்காதசென்மம்
பிணமென்பர்கண்டாய்பெரியோய் - இணையிலாச்

சாவடியும்வீடுந்தலைவாசலுஞ்சதங்கைச்
சேவடியுமைந்தர்களுந்தேவியரும் - பாவடியிட்

டேறுங்கடும்பரியுமெச்சேவையுஞ்சுவைகள்
ஆறுங்கலந்தவமுதுணவும் - வீறுங்

குடவண்டியுஞ்சலவைகொண்டுபயில்பின்னே
தொடரும்பிலுக்குஞ்சுகிப்பும் - குடையின்கீழ்

வீதிவலம்வந்தலவும்வேடிக்கையுங்கடுக்கன்
காதிலசைவதுவுங்கற்கட்டும் - சீதசந்தம்

பூசுவதுஞ்சப்ரமஞ்சப்பூவணையிலாங்காரம்
பேசுவதுமையன்பெருமையே - வீசிநிற்கும்

வட்டவிசிறிமருங்கசையக்கம்பளமேல்
இட்டகொலுவோடினிதிருந்து - நட்டதுட்டி

ஏதுகுடிநிலுவையேதுவரியோலை
ஏதுசுழிவுபிசகேதென்னச் - சோதி (கசுரு

நிலைவிளக்கின் பக்கலிலே நின்றுகொண்டு செய்தி
சிலகணக்கர் விண்ணப்பஞ் செய்வார் - பலகணக்கும்

நிச்சயமாக் கேட்டு நிலுவைக்குக் கால்வாசி
வைச்செழுதி விட்ட புதுமானியத்தில் - கைதச்ச

பொறுப்புக் கரைவாசி புன்செய்க் கிரட்டி
அறுப்புத் தொகைபோட்ட தற்கு - நிறுக்கதனில்

உள்ளபடி கூட்டொடிக்கு முத்தாரமும் பிசகும்
தள்ளதிலே பண்ணைகளுடந் தள்ளாதே - கொள்ளையா

ஊர்மணியக்காரனையிங் குள்ளேயழையுமென்று
பேர்வழியே ரொக்கப்பிரிவெழுதிப் - பாராரும்

திட்டமெல்லா முன்னுடைய திட்டமவர் மணியச்
சட்டமெல்லா முன்னுடைய சட்டமே - அட்டவணைச்

சிட்டுப்பதிவைத் திரும்பக் கூட்டித் துரைமுன்
கேட்டுக்கழித்ததெல்லாங் கிண்டிப்பார்த் - தோட்டுச்

சிலக்காத் தொகைவிட் டெழுதியே நெஞ்சைக்
கலக்காத வண்ணங் கலக்கி - அலக்கழிக்கும்

பிள்ளைமார் சற்றேறயும் பேர்கேட்கு முன்னரந்தக்
கொள்ளையெல்லாந் தீராதோ தோமானே - உள்ளபடி

வட்டமென்று நாணயத்தின் வட்டமென்று மெண்ணிக்கைத்
திட்டமென்று முத்திரையுட் சிக்கென்றும் - கட்டிரொக்கம்

சேர்க்குமுடிப்பென்றுஞ் சிலசிலவூர்ப் பணத்தைப்
பார்க்கிலிது பிடிப்பார் பார்வையென்றும் - காக்கும் (௧௮௦)

தடையமென்றுந் தூக்கித்தராசாணி றுக்க
இடைகுறையுமென்றுமிலையென்று - புடையிருந்து

நித்தமுநோட்டக்காரர்நெஞ்சடையக்கூப்பிடுவ
தத்தனையுமுன்னுடையவாதாளி - மத்தளத்தை

முத்தாகொட்டாண்டிமுகவணையைவாசிசெம்பா
கைத்தாளம்போடுகரும்பாவா - நித்தியைக்கூட்

டாதிசரளிபாடென்றதற்கேற்கப்பரதம்
சாதித்தபாத்திரத்தைத்தான்விட்டுப் - போதித்த

பிள்ளையாரொத்துமுதற்பேரணியுங்கூட்டிநய
முள்ளசலாமெடுப்பிலொன்றெடுத்துத் - தெள்ளிமையாய்

மிக்ககளிதைகவிகற்பஞ்சிலகாட்டிச்
சக்கணியிலோர்தருவுஞ்சாதித்துத் - தக்க

பதமுமபிநயத்தின்பாவரசமான
விதமுநயம்பிறக்கும்வேளை - முதலாளி

இங்கிதங்கண்டையாமற்றெங்கேபோராக்குநல்ல
சங்கீதசாகித்யசம்பன்னா - எங்களிந்த்ர

காவையொத்தகோமானேகன்னாவெனச்சிலபேர்
நாவசைத்துக்கெட்டியையாநல்லதென்பார் - பாவோட்டம்

ஓடுவதுகட்டுவன்மாரோகோவெனச்சிலர்கொண்
டாடுவதுமுன்னுடையவாவேசம் - பாடுகின்ற

செந்தமிழ்ப்பாட்டத்தனையுஞ்சின்னான்பாட்டாக்கியிங்கே
வந்ததென்றுகேட்கவொருமன்னவரை - அந்திபகல் (கசுக)

நெஞ்சுளைந்துபாடிநிறைவேற்றியேயதற்குப்
பஞ்சரத்நமாலையென்றும்பள்ளென்றும்-நெஞ்சுவிடு

தூதென்றுங்கோவைத்துறையென்றும்வண்ணமென்றும்
ஏதென்றுபேரிட்டுமென்னபலன் - காதுண்டாய்க்

கேளாதபுல்லாதுகேட்பரோநாலாறு
நாளாகவிட்டிடைநடந்தலுத்து - வேளையுண்டாய்ப்

பாடியபாட்டைப்படித்தாலப்போதிலொரு
மோடியுமாய்வேறுமுகமுமாய் - ஓடிவந்து

காதுக்குளாரோகசுகுசென்றுலித்தனையும்
ஏதுக்கண்ணாவியெழுந்திருமிப் - போதைக்குப்

பாக்குவெற்றிலைச்செலவுபண்ணிக்கொளுமென்னப்
போக்குவிட்டுநாலிரண்டைப்பொத்தலடைத் - தாக்கமுடன்

அண்ணாவிவந்தாலதற்கேற்கவேபரிசு
பண்ணுதசென்மமென்னபாழ்செனமம்-மண்ணுன

தொல்லைவந்துசூழ்ந்ததென்னசொல்வதுதாரைச்சுதினி
நல்லதென்றுமென்னாநழுவிவிட - வல்லமையும்

கொஞ்சத்தனமாகிக்குத்தாமற்குத்துண்டு
நெஞ்சத்துவைரமொடுநெட்டுயிர்த்துப்-பஞ்சத்திற்

பிள்ளைவிற்பார்போலப்பிரபந்தம்விற்றலையும்
கொள்ளைமுற்றுமுன்னைக்குறித்தன்றோ-வள்ளரிதாம்

இந்திரசாலவித்தைதயேற்பதொருநோக்குவித்தைத
மந்திரவாள்வித்தைதவாகடமாம் - அந்தவித்தை (உ02

செப்பிடுவித்தைசெலஸ்தம்பனவித்தை
தப்புவாரக்கினிஸ்தம்பவித்தை-ஒப்பிலா

வாயுஸ்தம்பிக்குமகாவித்தைகமிங்கசம்ப்ர
தாயத்திலேற்றுதனுசாஸ்திரவித்தை - காயத்தில்

வேஷங்கள்போடும்வினோதவித்தையாத்மவதைத்
தோஷங்களொண்ணாசூனியவித்தை - பூஷணமாய்க்

கூத்தாடிக்கேற்றகொடியவித்தைசொன்னபடி
ஆஸ்தானத்தேகுரங்கையாட்டுவித்தை - ஏந்திரிய

காருடவித்தையுநீகற்பித்தவித்தையல்லால்
ஆருடையவித்தைசொல்லாயப்பனே - பேருடைய

வங்காளமீழமலாக்காபிரதிக்கா
பங்காளங்கோவையொடுபைகோவை - அங்குள்ள

அச்சிசென்னபட்டணத்தோடானதொருவத்தாவி
கொச்சிகொல்லமன்னூர்குழம்புமுதல்-இச்சைபெறு

சீனமொடுநற்பம்மைதென்கன்னியாகுமரி
கானமிருயாழ்ப்பாணங்கற்பாடி - ஏனையுள்ள

கிட்டாதநீர்க்குழம்புகீழ்மாத்தார்காலி:பின்னும்
எட்டாததீவுகளெங்கும்போய் - முட்டிவந்து

கப்பன்முறிக்குங்கடலின்மீனுக்கொதுங்கித்
தப்பியிடறுசிலதான்றப்பி - அப்புறம்போய்

ஆனாலுமாச்சுதரியோகரியென்று
போனாலும்போச்சுதிந்தப்பொய்யுடனூன் - வானளவு(௨௧௫)

காவுகடற்பள்ளந்தனிலோர்சிராயைநம்பிப்
போவதுவுமுன்றன்பொருட்டன்றோ - காவலனே

மாயரசவாதமயக்கம்பிடித்தமுழுப்
பேயரதிலேமனதுபேதித்து - நீமுகத்தில்

நிற்கரசத்தைநிறுத்துவராம்பாஷாண
வர்க்கமெல்லாங்கட்டவகைவருமாம் - பொற்குணம்போல்

காரஞ்சிவந்துரைக்கண்டாராமப்படிசவ்
வீரஞ்சிவந்துமெழுகாமாம் - ஈரம்போய்

வங்கம்வலியமருந்தறிவாராஞ்சாதி
லிங்கங்குவளைபிறங்குமாம் - அங்கே

இரும்பிலேரியமெடுக்கமருந்துண்டாம்
திரும்பியொருமூலிகையிற்செம்பாம்-துரும்புமுதற்

சொன்னமாமென்றுமுன்னோர்சொல்லியதாங்கந்தகத்தை
வன்னமாறத்தயிலம்வைப்பாராம் - பொன்னிமிளை

தொட்டியரிதாரந்துத்தநாகந்தூரிசு
கட்டுநவாசாரங்கருப்பூரம் - பெட்டியுப்பு

வீட்டுப்பிந்துப்புவெடியுப்புடன்வளைய
லோட்டுப்போடைந்துப்புமொன்றாகக்-கூட்டியதைத்

செப்பமுடன்சேர்ந்துருகச்செம்புகளிம்பறுமாம்
அப்பிரகத்தேரசமுண்டாக்குவராம் - இப்படியே

ஒவ்வொருவரொவ்வொன்றையுன்னியிராப்பகலாக்
கவ்வைபிடித்திதுவேகங்கணமாய் - அவ்வவர்தம் (௨-௨-௬)

விட்டிலுள்ள தட்டுமுட்டுவிற்றுமாற்றுதுமனை
யாட்டிதனைவிற்றுமதற்கேற்க - நாட்டிலுள்ள

கட்டுசரக்கெல்லாங்கடையிலேவாங்கியதில்
மட்டறப்பூஞ்சாராயம்வார்த்தரைத்துத் - தட்டும்

எருவிற்புடம்போட்டெடுத்தபின்புமுட்டைக்
[illegible]ட்டரைத்துக்கழுவிப் - பருவமதாய்

வாய்விரிந்ததாழிக்குள்வைத்தாச்சிலசாமம்
தீயெரிந்துகாய்ந்துசிவக்கையிலே-பேய்முசுட்டைச்

சாறுங்கையாந்தகரைச்சாறும்பொன்னாங்கண்ணிச்
சாறும்பசுந்துட்டைச்சாறும்விட் - டேறச்

சுருக்குக்கொடுத்ததைச்சிந்தூரித்துச்செம்பை
உருக்கித்தெளியுமட்டுமூதிப் - பெருக்கமுடன்

சொன்னவயிரவன்போர்சொல்லியந்தசிந்தூரம்
தன்னையதிற்போட்டசமையத்தே - என்னவோ

வன்னஞ்சிவக்குமதைமாற்றிறைலென்றுகண்டு
சொன்னஞ்சரிகூட்டித்தொந்தித்துப் - பின்னையதில்

வங்கத்தைக்குத்திவிடவங்கமும்போய்முன்சொன்ன
தங்கத்தையுங்கெடுத்துத்தாழ்ச்சியாய் - அங்கே

கரிகொண்டகாசுமுதல்காணுமோவீணே
அரிகண்டமாய்க்கிடக்குதையோ - வரிகண்டா

இவ்வாறுகெட்டவர்களெண்ணிறந்தகோடியுன்னைச்
செவ்வாகக்கண்டவரோசிமானே - அவ்வளவோ (௨௩௫)

மண்ணாசைபெண்ணாசைமற்றுமுள்ளவாசையெல்லாம்
ஒண்ணாதெனவெறுத்தயோகியர்கள் - பண்ணுதவ

மாண்புடையோரொன்றானவஸ்துவைக்கண்டாலுமுன்னைக்
காண்பதிலேயாசைகணக்குண்டோ - வீண்பொழுது

போகாதென்றன்னைப்புறம்பாக்கடன்கொடுத்து
வாகாநியாயவட்டிவாங்காமல் - ஆகாத்

தினவட்டிவாங்குமந்தச்சிர்கேடர்சற்றுன்
மனதிற்குறிப்பறியமாட்டார் - தனதாய்நீ

வைத்தவட்டிதப்பாமல்வாங்கிக்கொடுப்பதிலே
மெத்தமகிழ்ந்துன்மேல்விருப்பமுற்று - நித்தவட்டி

கட்டளையாயுண்டுபிக்கக்காணுமேமகைப்முதற்கு
நட்டமில்லையென்றுநடக்குநாள் - வட்டியிலே

தாழ்ந்துகொள்வாயப்பாற்றறுகிமுதலுங்கூட
வீழ்ந்துகொள்வாய்நல்லவிளையாட்டு - வாழ்ந்திருக்கும்

நொற்றவர்தாமென்றுசிலர்கொத்துச்சரப்பணியும்
சற்றுமறுவில்லாச்சவுக்களியும் - வெற்றிபெறும்

அஸ்தகடகமதிகவிலைமோதிரமும்
இத்தனையும்பூட்டியிறுமாந்து - முத்துவடக்

கண்டசரமுங்கழுத்துமாயேறிவருந்
தண்டிகையும்போர்த்திட்டசாலுவையும் - ஒண்டரிக்

காறர்களும்வல்லயமுங்கர்ச்சிதராவுத்தர்களும்
ஏறுகுதிரைப்பவுஞ்சும்யானைகளும் - கூறுகின்ற (உசஎ)

கட்டியமுங்காளாஞ்சிக்காரர்களும்யானையின்மேற்
கொட்டியடம்மாரகோஷ்டிப்பும் - எட்டிய

பூரிகைநாகசுரமும்புடைநின்று
காரிகையார்வீசுங்கவரிகளும் - பாரினடை

தம்பட்டமுமவர்கடம்பட்டமுமுனது
கண்பட்டவாழ்வலவோகண்ணாளா - கும்பிட்டேன்

வேலைநெடுஞாலத்தின்மெல்லியர்க்கெல்லாங்கழுத்தில்
மாலையிடவந்தமணவாளனே - சோலிபண்ணிக்

காதலரைத்தப்பிப்போய்க்கள்ளப்புணர்ச்சிசெய்யுங்
கோதையருக்காசைக்கொழுநனே - பேதைதனில்

வாங்குதிருவாங்கிமறுகளவுபார்த்திருக்கும்
ஆங்கவர்தங்கள்ளமுறைக்கண்ணனே - ஓங்குகுலம்

தந்தரத்துக்கொவ்வாதுதாழ்ந்தகுலமானாலும்
வந்தெடுத்துப்பெண்கொடுக்குமாமனே - நொந்துமெத்தக்

கெட்டவன்கீழ்ப்பெண்டிருக்குங்கிள்ளைமொழியாள்வலிய
வட்டமிடுங்கைச்சரசமச்சானே - நட்டணைசேர்

கூத்திமாரோடிருந்துகோட்டிகொள்ளநாலிரண்டு
பேத்திமாருண்டுபண்ணும்பேரனே - நாத்திருந்த

ஓதுகலைஞானமுள்ளதெல்லாங்கற்றுநன்றாச்
சாதிக்கவைக்குந்தகப்பனே - பேதிக்கப்

போய்க்கொடியகானம்புகுந்தாலுமவ்வனத்தில்
வாய்க்கினியசோறூட்டுமாதாவே - பேய்க்குணங்கள் (உ-றுள)

ஆறுலுங் காமனெனுமண்ணனுக்குச்சொன்னவண்ணம்
தாறகப்பாடுபடுந்தம்பியே - தேறும்

பூங்குழலாள்விட்டிற்பொழுதுடனே தூதுசெல்லும்
பாங்கனுக்குமுன்புசெல்லும்பாங்கனே - நீங்கரிய

காட்டிலேபோய்க்களவுகாட்டாமல்வெட்டுமரம்
மூட்டிலேதீவெளிச்சமூட்டாமல் - கூட்டமிட்டுக்

கைவேலிக்குள்ளேகலையாமன்மாவுத்தர்
நெய்வேலெடுத்ததட்டிநில்லாமல் - மெய்பிணைக்குந்

சோட்டாணையில்லாமற்றோகைமார்கும்பமுலைக்
கோட்டானைவந்துவிழுங்கொப்பமே - நாட்டிலுள்ள

சித்தர்கள்கூடிச்செபியாமலாங்கவர்தம்
புத்திரரேதோபுலம்பாமல் - மொய்த்துநிற்கும்

ஆளரவமில்லாமலாயிழையாரல்குலெனும்
வாளரவமுள்ளாக்குமந்திரமே - நீளவொரு

மூங்கிற்கழியின்முடிந்தகயிறில்லாமல்
தூங்கச்சிறியவுண்டைதூக்காமல் - நாங்குழைவை

வள்ளுகிராலெற்றுமன்மாதர்சிறுகணைக்காற்
றுள்ளுவராலிழுக்குந்தூண்டிலே - கள்ளுண்ணத்

தேன்மறுகிவிழுஞ்செறிகுழலார்கள்ளவிழி
மான்மறுகிவீழுமணிவலையே - தான்மறுகி

அங்கொலியல்குடிநிற்குமன்னநடையாரிடத்திற்
சங்கொலியுண்டாக்குந்தடாகமே - துங்கமுலை (உகூஅ)

குன்றணைந்தமின்னார்கொடியிடையாஞ்சிங்கத்தைச்
சென்றணைந்து தூக்கிவருஞ்சிம்புளே - வென்றிவிழி

மாவடுவையொப்பார்மனதிலபிமானமெனுங்
காவலழிக்குமதகைக்களிறே - பாவையரிற்

பேசுமவுனம்பிடித்துப்பேசாதார்வாய்க்குமுத
வாசமலரைத்திறக்குமாமதியே - ரோசமுடன்

முந்தானைபோர்த்துமுலைப்பார்க்கவிழ்ந்தமுகச்
செந்தாமரைமலர்த்துஞ்செங்கதிரே - இந்துவைநேர்

நெற்றிமடமின்னார்நிதம்பத்துகில்குலையச்
சுற்றியடிக்குஞ்சுழல்காற்றே - பற்றியொரு

கட்டுடுத்தசேலையுமாய்த்தையலரல்லாரோடிவர
வட்டமிட்டுப்பெய்யுமழைமாரியே - ஒட்டமிட்டு

வெட்டிவெல்லக்கூடாவினையையரைநாழிகைக்குள்
கட்டிவெல்லக்கச்சைகட்டுங்காவலா - இட்டமுடன்

ஊரெல்லாஞ்சுற்றியொருவிடத்துந்தங்காமல்
பாரெல்லாஞ்சுற்றிவரும்பக்ஷியே - நேரிலே

மட்டுப்படாமன்மதமாயொருத்தருக்கும்
கட்டுப்படாக்கொடுவைக்காளையே - மூட்டாளாய்ப்

புத்தியில்லாராலும்புத்தியெல்லாந்தந்துகள
சத்தியெல்லாமுண்டாக்குந்தாஷ்டிகா - முந்திநீ

எவ்வளவுண்டாயிருந்தாயென்றாலுமவ்வளவுக்
கவ்வளவுவீறுபண்ணுமாங்காரா - செவ்வியர்பால் (௨௭௯)

நாற்றுவரைக்குன்றானுந்திருநாமுகியப்பால்
ஆற்றுவரத்தாப்பெருகுமையனே - வேற்றுமொரு

வஞ்சகமின்றிமதுரைவழியோலைபிடித்
துஞ்சலிலேயோடியலைவாரும் - பஞ்சமோ

ந்பாயத்தொழிலைவிட்டுநட்டநடுக்காடுதொறும்
ஆயத்துறைகாத்தலைவாரும் - காயத்தில்

நாலைத்தரித்திருந்துநாறுமலையேறிநித்தம்
சேலைச்சுமடுசுமப்பாரும் - ஏலமலைக்

கல்லடித்துவீழ்த்துக்கடவுளர்தம்பாலயத்தைச்
செல்லுமிடங்கல்லிட்டுச்செய்வாரும் - சல்லிகளை

மாறெடுத்துத்தூர்த்துமரமறுத்துஞ்செங்கலுக்கு
நீறெடுத்துமுட்டாளாய்நிற்பாரும் - கூறுவதென்

ஆர்க்குமுயிர்மேலாசையானாலுமெண்ணுமற்
போர்க்குவினைபத்தலத்திற்போவாரும் - பார்க்குங்கால்

நாளிற்றுறைமேயற்றிறலொருவனைறிவாத்
தோளிற்சிவிகைசுமப்பாரும் - நாளிட்டுச்

சோற்றுக்கரைக்கால்காலென்றுதொகைவகையோ
டேற்றிப்பணச்சோறிடுவாரும் - காற்றுக்கும்

வெய்யிலுக்குமஞ்சாமல்வேற்றாரிற்கொண்டுவிற்றுப்
பைமுதற்குமேல்வரத்துப்பார்ப்பாரும் - கைசலிக்க

அங்காடியிற்றுமரிப்பரித்துங்கால்பாதி
தொங்காதேதாவென்றுசுழல்வாரும் - தங்காமல் (உ௬௯)

ஒற்றைமரமேறியொலிகடலின்மீன்பிடித்து
விற்றுநரகில்விழுவாரும் - பற்றிநடந்

தாராகிலுங்கொடுத்தாலாலிங்கனதானம்
சோராமல்வாங்கத்துணிவாரும் - ஓரொருவர்

வல்லமைகள்சொல்வதென்னமானிடரெல்லாமுன்னை
யல்லதுதேடும்பொருளேதாண்டவனே - சொல்லக்கேள்

மாயப்பிரபஞ்சமெல்லாம்வாவாவுனதுசம்ப்ர
தாயப்பிரபஞ்சமிதுசத்தியமே - பேரயப்பால்

ஆருடனேசொல்வதுன்னையல்லாமற்காமநலம்
சீருடனேயின்பஞ்செனியாதே - பேரழகிற்

சிவகனேயாகிலுநீசேர்ந்திராயாகிலொரு
பாவையராணுலுமுகம்பார்ப்பாரோ - வாவாவுன்

வீட்டிலேநான்வரத்தான்வேளைகிடையாதோசி
மாட்டிபேசென்றாலும்வாய்திறவாள் - கேட்டால்

ஒருத்தலேனோவாமுடம்புசுரத்தால்
வருத்தமாங்காதில்வலியாம் - பொருத்தெல்லாம்

கட்டுவிட்டுக்கால்கைகடுக்குதாஞ்சந்தியிற்பேய்
தொட்டுவிட்டத்தாலேதுவளையாம் - விட்டுவிட்டுக்

காயுதாமத்தோடேகண்ணேக்காடாம்வயிற்றில்
வாயுவாநீர்ப்பாடுவந்ததாம் - தாயார்க்குப்

பித்தமாம்வாந்திபிராந்தியாமாயாச
மெத்தவாஞ்செவ்வாய்க்கும்வெள்ளிக்கும்-சுத்தமா (கூ0ந)

மற்றொருவர்கிட்டவரப்படாதாந்தெய்வங்
குற்றமாமுண்மருந்துகொண்டாளாம் - சற்றல்ல

பத்தியமாமாரோபணையங்கொடுத்தநாரு
முத்துவண்ணச்சேலையாமுந்தியாம் - மெத்தவஞ்சம்

வின்னுவதுமீயில்லாவேஊியிலங்கீலியர்க்குக்
கொள்ளிவிளை வதென்னகொஞ்சமோ - வள்ளமே

ஏறங்கறைபரானுலுமொண்டிகுருடானுலும்
ஆங்கமுள்ளசாதியிமுடகானுலும - மோகமுடன்

கண்ணுரவுன்னிலயங்கேகண்டுவிட்டாலிங்குவர
ஒண்ணுதோகூந்திமாரொட்டாரோ - பெண்ணரசி

மாப்பிளைநீரென்றுமகுனிமார்வாராரோ
கூப்பிடென்றுமாமிமார்கூறுரோ - மூப்பாயி

பார்க்கவந்தாற்போலவொருபக்கத்திருந்துடம்பு
வேர்க்குதெனப்போர்த்திமார்விசாரோ-ஏற்கையுடன்

மிக்கசிறுபாக்கும்வெற்றிலையுந்தான்சுருட்டித்
தக்கொழுந்திமார்தாராரோ - அக்கணமே

நோயெங்கேபோமோநொடிக்குமுந்திக்கொல்லுமந்தப்
பேயெங்கேபோமோபெருமானே - நாயகிமார்

கூச்சமுமாய்ச்சற்றேகுணலையுமாய்க்கொஞ்சுதலைப்
பேச்சுமாய்ப்போர்த்தபிடவையுமாய் - வாய்ச்சதொரு

பாடகமுங்காலுமாய்ப்பாக்கொதுக்குங்கையிலிட்ட
சூடகமுங்கொங்கைதுலுக்குமாய் - ஆடகப்பொற் (கூகஉ)

கட்டிலின்கீழ்வந்துகவிழ்ந்துநிற்பதோகளப
வட்டமுலைகாட்டிமறைப்பதோ - பெட்டிதனில்

வாடைப்பொடியெடுக்குமார்க்கம்போல்வந்துமெள்ளக்
கூடிக்கலந்திருந்துகொள்வதோ - வேடிக்கை

பாக்குக்கொடுக்குமந்தப்பாசாங்கோசெம்பவள
வாய்க்குள்ளேபுன்சிரிப்பின்மார்க்கமோ - நோக்கமாய்ச்

சேலையொருகட்டுடுக்குந்நீவரமோபூங்குழலின்
மாலைகுலைத்திடுமம்மாயமோ - சாலமென்ன

சொல்லுவேன்பாரத்தனைமுலைகண்மார்பழுந்தப்
புல்லுவார்மேனிபுளகிப்பார் - மெல்லப்

பிடவையவிழ்ப்பார்பிணைந்திறுகக்கட்டித்
துடையைநெருக்கச்சொலுவார் - இடையை

நெளிப்பார்கவுளைநெருக்கிபிதழூறல்
அளிப்பார்குழைந்துவசமாவார் - களிப்பாக

முத்திடுவார்முத்தமுகப்பார்செவிக்குள்ளே
கத்துகுரலெழுப்பிக்காட்டுவார் - தத்தரமாய்

மேற்கொள்வாரார்மேல்விசாரமுனக்கென்றழுது
மார்க்கமாக்கண்ணீர்வருவிப்பார் - வேற்கருங்கண்

பூசலாடக்காதும்பொன்னுங்கிடந்துதுவண்
டேசலாடக்கொப்புடனே - வாசமலர்க்

கூந்தலவிழ்ந்துகுளிர்ந்தமுகமறைப்பக்
காந்தளங்கைநீக்கிவெளிகாண்பிக்க-மாந்தளிர்ப்பொன் (௩உ௩)

மெய்புஞ்சிலீரென்னமிக்கசீர்த்தாடனஞ்செய்
கையும்பளீரென்னக்கண்ணொன்னும் - மையெழுதுங்

கூற்றுஞ்செவ்வேலென்னக்கொவ்வைமணிவாய்ப்பவளம்
வேற்றுக்குணமாய்வெளேலென்ன - நாற்றிசையும்

கூட்டுபொடிவாடைகுபீரென்னக்கோலமுன்கை
காட்டுதொடியோசைகலீரென்ன - ஈட்டுகுறு

முத்தனையவேர்வுமுகமும்பளபளெனத்
தத்துமணிச்சுட்டிதளதளெனப் - பத்திபடும்

ரோமத்தொழுங்கினுதரச்சுழியெறியச்
சேமித்தகாமத்திவலைசிந்திப் - பூமெத்தை

எங்குமணங்கமழவேகவடம்புரளக்
குங்குமத்தங்கக்குடங்குலுங்க - அங்கே

மருவிமருவிவலசாரிவந்து
திரியுமிடசாரிதிரும்பிப் - பெருகுதையா

போகமெனக்குப்பொறுதுபொறுதென்று
மோகமழலைமொழிபதறித் - தாகமுயாய்த்

தள்ளாடிச்சொல்லுந்தளர்நடையும்பாவனையும்
கள்ளாவுன்மீதில்வைத்தகாதல்காண் - விள்ளுவதென்

உன்னாலேயிவ்வாறுடன்முறியப்பாடுபட்ட
பின்னுரைச்சும்மாவிடுவாயோ - முன்னே

மரியாதையுள்ளமனிதரைப்போற்கள்ளா
தெரியாமலூரிற்றிரிந்து - வரிநெடுங்கட் (௩௩௪)

கன்னியருக்குள்ளே கணக்காகக்கேட்டவட்குச்
சொன்னபணையங்தொகையாக - முன்னே

கொடுத்தனுப்பிராத்திரிபோய்க்கோலாகலமாய்ப்
படுத்தனுத்தபின்னுறக்கம்பார்த்துக் - கெடுத்துவிடச்

சொக்குப்பொடியெடுத்துத்தூற்றியுடைமையெல்லாம்
கைக்கொத்தவண்ணங்கழற்றியே - ஒக்கப்பின்

வேவாள்விடாமல்விடியவொருசாமமெனப்
போவார்களுன்னுடையபோதிப்பு - நோவாக

ாயமருந்தையிட்டுர்வாடைகுளித்துஞ்செபித்தும்
தூயதிருநீறுநெற்றிதொட்டிட்டும் - நாயகரைப்

போட்டிசெய்துங்கட்டிப்பொருள்பறித்தபாவமிதோ [ம்
காட்டியதென்றெல்லோர்க்குங்காண்பிப்பாய்-கேட்டதெல்லா

உள்ளதுள்ளதென்பார்களுட்கடங்கண்டிருந்தும்
வெள்ளைவெள்ளையென்பார்கண்மேதினியோர்-எள்ளளவும்

தேறுவதிங்காரனுந்தேறப்படாதுன்னைக்
கூறுவதிங்கென்னாலேகூடுமோ - பேறுதரும்

பொன்னேநவமணியேபுண்ணியவானேயுலகில்
உன்னாலேமுற்றுதொன்றுண்டோ - மின்னார்க்கு

மெய்யன்பனான திருவெங்கடேசேந்திரனென்
ஐயன்கருத்திலபிமானித்துத் - துய்யதிரு

நெல்லைநகர்வாழுநிமலனுக்குந்தென்னிமய
வல்லியெனுஞானவடிவாட்கும் - நல்ல (௧௪௫)

திருக்கலியாணத்திருநாண்மிகவும்
பெருக்கமுடன்செய்வித்தபின்பு - மருக்கமழ்பூஞ்

சோலைசெறிநெல்லைசார்தோணிறையக்காந்திமதி
மாலையிடுமாயிரக்கான்மண்டபத்தே - வேலைவிடம்

உண்டபெருமானையுண்மைமறைப்பொருளை
சண்டனைமுன்னுதைத்ததாளானைப் - பண்டுபதி

னாறாயிரம்வருடமம்புவிக்குவேந்தாகி
மாறுமுடிதரித்தவானவனை - வீறனத்

தாம்பிரசபைப்பானைத்தவளவெள்ளிவெற்பானை
மேம்படுசெம்பொன்மலையின்வில்லானைப் - பாம்பணிந்து

நிற்பொருளியுமேனியுமாய்நின்றபிரானைதிரே
தோற்றியமெய்ஞ்ஞானச்சுடர்க்கொழுந்தை - மாற்றலர்

வெங்கோலைநீக்கியெங்கள்வெங்கடேசேந்திரற்குச்
செங்கோல்கொடுத்தசந்த்ரசேகரனை - எங்கள்

அனவரதநாயகனையாண்டவனைச்செம்பொன்
வனசமலர்ப்பாதம்வணங்கித் - தினமுமிருந்

தெண்ணான்கறம்வளர்த்தவிச்வரியைத்தென்னிமயப்
பெண்ணாகியண்டமெல்லாம்பெற்றவளைக் - கண்ணாலே

காணத்தெவிட்டாதகட்டழகியைப்பசும்பொற்
பூணுக்கிசைந்ததெய்வப்பூங்கொடியைச் - சேணளந்த

தண்டலைசூழ்காழிவருசம்பந்தப்பிள்ளைக்குப்
பண்டுமுலைப்பால்கொடுத்தபார்வதியைத் - தொண்டருக்கோர்

3

அவினையக்கொத்தோடென்னையாண்டவனைக் காந்திமதி
தேவியையான் கண்குளிரச் சேவித்தேன் - பூவுலகில்

வாழி திருவேங்கடநாதன் வம்சமெல்லாம்
வாழியென்று முக்காலும் வாழ்த்தினேன் - சூழுமத

யானைபணி வாசலானையருட் கடலை
ஞானமறைநாலுமுணர் நாயகனைத் - தீனர்பெறு

தாரித்திரியமெனச் சாற்றுமந்தகாரத்தைத்
தூரத்துரத்துகொடைச் சூரியனைத் - தேருற்று

வண்ணப்பொன் மேனியென்றுமார்க்கண்டன் போலிருக்க
விண்ணப்பஞ்செய்துநன்றுவேண்டினேன் - கண்ணுக்குப்

பாங்கான காட்சியெல்லாம் பார்த்தேனெருக்கும்
பூங்காமவேளை வெல்லப்போகாதே - ஆங்கே

திருக்கட்டையேந்திநிற்குந் தேவடியார் தம்முள்
ஒருத்திக்கு மால்கொண்டுழன்றேன் - கருத்திற்

குடிபுகுந்தமாதுபோற் குங்குமப்பூங்கோதை
அடிகளை நீ கண்டாலறிவாய் - துடியிடையாள்

பூண்டுபொருத்திட்ட பூஷணமும் பொங்குமென்
ஆண்டவனே நீயல்லாலார் தந்தார் - வேண்டுபல

மாந்தரங்குநட்டெனினும் வாவாவிலைமாதர்க்
காந்தரியமுன்னிடத்திலல்லவோ - காந்திபெறு

கோலவனைவிட்டுக் கொடுங்கையிலே நான் படித்த
காலமல்லவோ வெனக்குக்கண்ணுறங்கும் - நீலி (௩௬௭)

கொலைக்கருங்கண்பாய்ந்துகுடைந்திடுமென்மார்பில்
முலைக்கருங்கண்பாய்ந்தாலேமுக்யம் - பெலக்கத்

துரைப்பணநீகைபுகுந்தாற்றோகைமடமின்னாள்
அரைப்பணமென்கைக்குள்வசமாமே - வரைப்புறத்தில்

பீடுபெறுமாமேகம்பெய்யவந்தபோதுமயில்
ஆடுவதல்லாக்காலமையுமோ - ஓடுவதோர்

வெப்பாவினைக்கண்டுவிரிவதல்லாற்பூங்கமலச்
செய்யமலர்மகிழ்ச்சிசெய்யுமோ - ஐயாநீ

தாறுசென்றால்வந்தெனதுசோகந்தணிப்பளந்த
மாதுதன்னைப்போபணழைத்துவா. (௩௱௨)

பணவிடுதூது முற்றிற்று.

---

திருமாலிருஞ்சோலைமலை

# அழகர் கிள்ளைவிடு தூது.

இது

கோயமுத்தூரைச்சார்ந்த பூளைமேடு

மு. வேணுகோபாலசாமி நாயுடவர்களால்

பரிசோதிக்கப்பெற்று,

ஷையார் மாணுக்கர்

பாப்பநாயக்கன் பாளையம்

கஸ்தூரி நாயுடவர்களால்

சென்னை

செங்கல்வராய நாயகர் ஆர்பனேஜ அச்சுக்கூடத்தில

பதிப்பிக்கப்பட்டது.

1905.

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# முகவுரை.

ஸ்ரீவைகுண்ட நிகேதனாய் உயர்வற வுயர்நல முடையவனாய் அயர்வறுமமரர்களதிபதியான ஸ்ரீமந்நாராயணன் அர்ச்சாவதாரமாகக் கோயில்கொண்டெழுந்தருளியிருக்கும் நூற்றெட்டுத் திவ்ய தேசங்களிலொன்றாய் நம்மாழ்வார் பெரியாழ்வார் குலசேகராழ்வார் திருமங்கையாழ்வார் ஆண்டாள் ஆகிய ஐவரால் மங்களாசாஸனம் செய்யப்பட்டதாய், திருமால்குன்றம், முதநிதரு பொழுசர் திருமலை, என்று சிலப்பதிகாரத்திலும் கந்தப்புராணத்திலும் புகழப்பட்டதாகிய திருமாலிருஞ்சோலைமலையில், மந்தரம் நாட்டியன்று மதுரக்கொழுஞ்சாறுகொண்ட, சுந்தரத்தோளுடையாராகிய அழகர், திவ்யாபரண பூஷிதராய்க் குதிரை நம்பிரான் மேல் ஆரோகணித்து வைகைநதிக்கு எழுந்தருளும்போது சேவித்து, அழகர் சுந்தரத்தில் ஈடுபட்ட ஒருநாயகி, வேட்கைமிகுந்து அப்பெருமானுடைய பேரழகையும் திருக்கலியாண குணங்களையும் புகழ்ந்து தன்வேட்கையை ஒருகிளியினிடம் எடுத்துரைத்து அப்பெருமானணிந்திருக்கும் திருத்துழாய்மாலையை வாங்கிவரும்படியாக அந்தக்கிளியை மிகவும் வேண்டித் தூது அனுப்புவதாகச் செய்யப்பட்ட திருமாலிருஞ்சோலைமலை அழகர் கிள்ளைவிடுதூது என்னும் இந்நூல், சொன்னயம் பொருணயம் சிலேடைகற்பனையலங்காரம முதலிய சிறப்புக்கள்பெற்று, ஆழ்ந்த கருத்துடன் கற்றோர் மனத்தைக்கவர்ந்து, மகிழ்ச்சியடையுமாறு பாடியருளிய ஆசிரியர் திருநாமம் சரித்திரம் முதலியன விசாரித்தவிடத்து, ஒன்றும் புலப்

படவில்லை. மிகவும் பழைய ஏட்டுப்பிரதி ஒன்றைத் துணைக்கொண்டு, அடியேன் சிற்றறிவிற்குப் புலப்பட்டவரையில் கரலிகிதவழுஉக் களைக்களைந்து, திருத்திப்பதிப்பிக்கலாயினேன். இந்நூலாசிரியர் சரித்திரத்தையும், இந்நூலிலமைந்துள்ள அரியவிஷயங்களையும், சுத்தபாடங்களையும், தமிழபிமானிகள் யாராவது தயைசெய்து அடியேனுக்குத் தெரிவிப்பாராயின், அன்னோர் திறத்து நன்றி யறிதலோடு வந்தனஞ் செலுத்துங் கடப்பாடுடையேனா யிருக் கின்றேன்.

இந்நூலிற் சிலவற்றிற்குச் சுத்தபாடங்களை அன்புடன் தெரிவித்த ஸ்ரீ வில்லிபுத்தூர் ஹிந்து ஹைஸ்கூல் தமிழ்த்தலைமைப் புலவர் ஸ்ரீமத் உ. வே. ரா. அப்புவையங்கார் ஸ்வாமிகளுக்கு அனந்தமான தண்டன் ஸமர்ப்பிக்கின்றேன்.

செந்தமிழிலக்கண விலக்கியங்களை நன்கு கற்றுத்தேர்ந்த வைஷ்ணவ வித்வான்கள் செய்தருளிய செய்யுள்நடையிற் சிறந்த பழைய தமிழ்நூல்களை அச்சுவெளிவந்த அனந்த வருடங்களாக அச்சிற்பதிப்பிப்பாரும் பரிபாலிப்பாருமின்றி ஏடுகளிலிருந்தே செல்லுக்கிரையாகியும் மறைந்துங் கிலமாதலைக்கண்டு, அவற்றிற் சிலவற்றை அச்சுத்தேரில் அலங்கரித்து, உலகமெங்கும்பரவி வைஷ்ணவத்தமிழ்மணம் பரிமளிக்குமாறு செய்யக்கருதி, "மாறன் கோவை" முதலிய சில நூல்களை வெளிப்படுத்தலானேன். இன்னும், திருவரங்கக்கோவை - திருவேங்கடக்கோவை - கச்சிக்கோவை - அழகர்கோவை ஆகிய நான்கினும் முதல் இடை இறுதிகளில் சிற்சில செய்யுட்கள் வீடுற்ற பிரதிகளாக அடியேன்பாலிருக் கின்றன. முழுப்பிரதியாக வைத்துள்ளோர் பெருங்கருணையுடன் உதவுவாராயின், அச்சிட்டு வெளியானபின், அவரது ஏட்டுப்பிரதியும்

இரண்டு அச்சுப்பிரதியும் பெறவிடுப்பதுமன்றி, அவர்திறத்துப் பெரிதும் நன்றிபாராட்டற்பாலேன். "ஸ்ரீரங்கஸ்தலபுராணம்" வளவனூர், ஸ்ரீமாந் தே. சடகோபபிள்ளை அவர்களால் உதவப் பெற்ற மிக்க பழம் பிரதியொன்று அடியேனிடத்துப் பரிசோதனையிலுள்ளது. இப்புராணம் வைத்துள்ள தமிழபிமானிகள் உபகரிப்பார்களாயின், அவர்கள் உதவியை என்றும் மறக்கற்பாலனல்லேன்.

இங்ஙனம்

தாஸன்

**மு. வேணுகோபாலசாமி நாயுடு,**

பூளைமேடு, கோயமுத்தூர்.








ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# அழகர் கிள்ளைவிடு தூது.

## காப்பு.

தெள்ளு தமிழழகர் சீபதிவாழ் வாழ்த்து
கிள்ளைவிடு தூது கிளத்தவே-பிள்ளைக்
குருகூரத் தானைச்சங் கூர்கமுகி லேறுங்
குருகூரத் தானைச்சங் கூர்.

## நூல்.

கார்கொண்ட மேனிக் கடவுளைநற் பேர்கொண்டு
நீர்கொண்ட வாய னிறங்கொண்டு-சீர்கொண்ட
வையம் படைக்கு மதனையுமேற் கொண்டின்பஞ்
செய்யுங் கிளியரசே செப்பக்கேள்-வையமெலாம்
வேளாண்மை யென்னும் விளைவுக்கு நின்வார்த்தை
கேளா தவரார்காண் கிள்ளையே-நாளு
மலைத்திடு மாரனெற்றை வண்டிலுமில் லாமற்
செலுத்தியகாற் றேரைமுழுக் கோராய்ப்-பெலத்திழுத்துக்
கொண்டுதிரி பச்சைக் குதிரா யுனக்கெதிரோ
பண்டுதிரி வெய்யோன் பரியேழுங்-கண்ட (௫)

செகமுழுது நீஞான தீபமுநீ யென்று
சுகமுனியே சொல்லாரோ சொல்லாய்-வகைவகையா
யெவ்வண்ண மாய்ப்பறக்கு மெப்பறவை யாயினுமுன்
னைவண்ணத் துள்ளே யடங்குமே-மெய்வண்ணம்
பார்க்கும் பொழுதிலுனைப் பார்ப்பதியென் பாரென்றே
மூக்குச் சிவந்தாய் மொழிந்திடாய்-நாக்குத்
தடுமாறு வோரையெல்லாந் தள்ளுவரே யுன்னை
விடுவா ரொருவருண்டோ வின்னா-யடுபோர்
மறந்தரு சீவகனார் மங்கையரிற் றத்தை
சிறந்ததுநின் பேர்படைத்த சீரே-பறந்துவரு
மாரும் பறவைகளுக் கச்சுதன்பே ருஞ்சிவன்றன்
பேரும் பகர்ந்தாற் பிழையன்றே-நேர்பெறுவி
வேகி யொருகூடு விட்டுமறு கூடடையும்
யோகி யுனக்குவமை யுண்டோகா-ணீகிர
மாகையா லாடை யுனக்குண்டே பாடகமு
நீகொள்வாய் காலாழி நீங்காயே-யேகாத
கற்புடையாய் நீயென்றாற் காமனையுஞ் சேர்வாயே
யற்புடைய பெண்கொடிநீ யாகாயோ-பொற்புடையோர்
துன்னியசா யுஜ்யஞ் சுகரூப மாகையினா
லன்னதுதா னின்சொருப மல்லவோ-வன்னி
பரிசித்த வெல்லாம் பரிசுத்த மென்றே
யரிசித்த ருன்னெச்சி லார்வார்-தரிசற்றே
ரின்சொல்லைக் கற்பா ரெவர்சொல்லு நீகற்பா
யுன்சொல்லைக் கற்கவல்லா ருண்டோகா-ணின்போலத்
தள்ளரிய யோகங்கள் சாதியா தேபச்சைப்
பிள்ளையாய் வாழும் பெரியோரா-ருள்ளுணர்ந்து
மாலினைப் போல மகிதலத்தோர் வாட்டமறப்
பாலனத் தாலே பசிதீர்ப்போய்-மேலினத்தி

னட்டா ரெனினு நடந்துவரும் பூசைதனை
விட்டார் முகத்தில் விழித்திடாய்-வெட்டுமிரு (உ0)
வாளனைய கண்ணார் வளர்க்கவளர் வாயுறவில்
லாளனே நீ கண்டா லகன்றிடுவாய்-கேளா
யிருவடிவு கொண்டமையா லெங்கள் பெரிய
திருவடிகள் வீறெல்லாஞ் செய்வாய்-குருவாய்ச்
செபதேசி கர்க்கெல்லாந் தென்னரங்கர் நாம
முபதேச மாக வுரைப்பா-யிபமுலையார்
சித்தங் களிகூரச் செவ்விதழி லாடவர்போன்
முத்தங் கொடுக்க முகங்கோணாய்-நித்தமவர்
செவ்விதழ்நின் மூக்கிற் சிவந்ததோ வுன்மூக்கி
லவ்விதழி லேசிவப்புண் டானதோ-செவ்வியிழந் (உரு)
தண்டருக்குந் தோற்று தடுவேளின் மானேநீ
கொண்டிழுத்தா லார்க்குங் குறையுண்டோ-வுண்டடக்கு
மாயுவையுண் ணீட்ட வருந்தவத்தோர் பூரகஞ்செய்
வாயுவையும் பின்னே வரவழைப்பாய்-தேயசொளிர்
மைப்பிடிக்கும் வேற்கண் மலர்மாதுஞ் சங்கரியுங்
கைப்பிடிக்க நீவங் கணம்பிடித்தாய்-மெய்ப்பிடிக்கும்
பச்சைநிற மச்சுதற்கும் பார்ப்பதிக்கு முன்றனக்கு
மிச்சைபெற வந்தவித மெந்தவித-மெச்சுங்
குருகீர்த்தி நாக்குத்தான் கூழைநாக் கான
தரிகீர்த்த னத்தினு லன்றோ-தெரிவையர்க (ங0)
ளார்த்தவிர லுன்முகமொப் பாகையா லேகையைப்
பார்த்துமுகத் தைப்பெரியோர் பாரென்பார்-சீர்த்திக்
கிரியியிலே சாணுங்காற் கிள்ளையடை யாத
பெரியதனம் வீணன்றோ பேசாய்-தெரியுங்காற்
றேறுகனி காவேரி சிந்துகோ தாவிரியும்
வீறுபெற மேவி விரும்பினுங்-கூறிலனை

பால்குடிக்கும் பச்சைக் குழந்தைக் யாறுதுங்
கால்பிடிப்பார் கோடிபேர் கண்டாயே-மால்பிடித்தோர்
கைச்சிலேயே வாழ்வருந்துங் காமனோடுந் தீர்ப்பதற்குப்
பச்சிலை ரூபம் படைத்தவந்தா-யச்ச
மனப்பேய் தையர்மால் வளர்ந்தடவோ வன்னி
யெனப்பேர் படைத்தா யியம்பா-யனத்தை
நிலவோ வென் பார்க ளொடுந்துயர்வே ழுந்தைக்
கொலவோ வரிவடிவு கொண்டாய்-சிலைநுதலார்
கொள்ளை விரகக் கொடும்படையை வெல்லவோ
கிள்ளை வடிவெடுத்தாய் கேற்பாய்நீ-யுள்ள
மிகவுடைய மாதர் விதனங் கெடவோ
சுகவடிவு நீகொண்டாய் சொல்லாய்-தகவுடைய
தத்தை யடைந்தவரே தத்தையடை யாரென்று
வித்தையடைந் தாருனையே மெச்சுவார்-முத்தமிழோர்
மாரதி பாரதியார்க் குன்னையுவ மானிப்பா
ராரதிக மார்தாழ் வறைந்திடா-பூரதிய
நெய்யிற்கை யிட்டாலு நீதான் பசுமையென்றே
கையிட்டுச் சுத்தி கரிக்கலா-மெய்யில்
வடிவம் வளைந்த மணிமூக்கு மாயன்
கொடியி லிருப்பவர்தங் கூறே-நெடியமால்
விண்டு தனித்தூது வேறுகா ணந்தனிலே
பண்டு தழைத்த பசுந்தழையோ-கொண்டசிற
கல்லிலங்கு மெய்யானை யன்றழித்து வீடணனுக்
கொல்லிலங்கை கட்டுபுதுத் தோரணமோ-நல்வாய்
மழலை மொழிதான் மணிவண்ணன் செங்கைக்
குழலி னிசைதானோ கூறு-யழகுக்
கிளிப்பிள்ளாய் தெள்ளமுதக் கிள்ளாய் நலங்குக்
குளிப்பிள்ளா யின்பரசக் குஞ்சே-களிப்பிள்ளை

தன்னைத்தாய் போலெடுத்துச் சஞ்சரிக்குஞ் சம்பத்தாய்
பின்னைத்தாய் கையிலுறை பெண்டத்தாய்-பொன்னொத்தாய்
முத்திநக ரேழிலொன்றே முத்தமிழ்வல் லாதிலொன்று
மொத்ததனித் தவ்வரிப்பே றுற்றதொன்றே-சுத்தமுறு
மைந்துபூ தத்திலொன்றே யானபடை நான்கிலொன்றே
மூந்துமுத லானபொருண் மூன்றிலொன்றே-வந்த
விருபசையி லொன்றே யிமையா விழியே
பருவ விழியிலுறை பாவா-யொருநாளி (௬௫)
லேத்துந் திருமாலை யெய்தப்போ யூரெல்லாந்
தூற்றமால் கொண்டகதை சொல்லக்கே-டோற்றி
யரிவடிவு மாய்ப்பின் னரன்வடிவு மாகிப்
பெரியதொரு தூணிற் பிறந்து-கரிய
வரைத்தடந் தோளரக்கன் வன்காயங் கூட்டி
யரைத்திடுஞ் சேசெ யருந்தி-யுருத்திராய்ப்
பண்ணுந் தொழிலைப் பகைத்துநிலக் காப்புமணிந்
துண்ணும் படியெல்லா முண்டருளி-வெண்ணெயுடன்
பூதனை தந்தபால் போதாம லேபசித்து
வேதனையும் பெற்று வெளிநின்று-பாதலத்தைத் (௭௦)
தள்ளிநடை யிட்டுத் தவழ்ந்து விளையாடும்
பிள்ளைமை நீங்காத பெற்றியா-னெள்ளிளைஞர்
கொல்லைப்பெண் ணைக்குதிரை யாக்குந் திருப்புயத்தான்
கல்லைப்பெண் ணாக்குமலர்க் காலினான்-சொல்கவிக்குப்
பார முதுகடைந்த பாயலான் விண்ணவர்க்கா
யார முதுகடைந்த வங்கையா-னரியுடன்
வன்கா னகங்கடந்த வாட்டத்தான் வேட்டுவற்காய்
மென்கா னகங்கடந்த வீட்டினான்-னென்காதல்
வெள்ளத் தமிழ்நிறைன் வேலைக்கு மேன்மிதந்தா
னுள்ளத்துள் ளானுலகுக் கப்பாலான்-றெள்ளிதின் (௭௫)

வெட்ட வெறுவெளியி லேநின்றுந் தோற்றுதான்
கிட்ட விருந்துங் கிடையாதான்-றட்டாகா
னெண்ணிலே மாய னெனும்பேரி னாலொளிப்போன்
கண்ண னெனும்பெயராற் காண்பிப்போ-னெண்ணுங்கா
லெங்கு மிலாதிருந்தே யெங்கு நிறைந்திருப்போ
னெங்கு நிறைந்திருந்தே யெங்குமிலா-னங்கறியு
மென்னை யெனக்கொளித்தி யானொன்றுங் காணாத
தன்னை யெனக்கருளுந் தம்பிரான்-முன்னைவினை
கொன்று மலையாகக் கூட்டங் குலைத்தென்னை
யென்றுந் தனியே யிருத்துவோன்-றன்னுயிர (௮௦)
மாவுநான்மன்னுயிரு நான்மற் றனைவரையு
மேவுவான் றானுநா னென்றுணர்த்தக்-கோவலர்பா
லானுமா யான்கன்று மாகி யவற்றைமேய்ப்
பானுமாய் நின்ற பரஞ்சோதி-மானரகப்
பேரிரு ணீக்கப் பெருந்தவம்வேண் டாமுடலி
னாருயிர் கூட்ட வயன்வேண்டாம்-பாருமெனச்
சங்கத் தொனியுந் தடங்குழ லோசையெனுந்
திங்கத் தொனியுந் தொனிப்பிப்போன்-பொங்குமறை
மோதும் பரனாதி மூல மிவனென்றே
யோதுங் கரியொன் றுடையானீண்-முதலைகைத் (௮௫)
தந்திடு வோன்றுடைப்போன் றானுநா னென்றுதிரு
வுந்தியான் வாயா னுரைத்திடுவோன்-பைந்தமிழா
லாதிமறை நான்கையுநா லாயிரத்து நற்கவியா
லோதும் பதினொருவ ருள்ளத்தான்-பாதமெனுஞ்
செந்தா மரைமலரிற் சிந்திய தேன்போலு
மந்தா கினிவழியும் வண்மையினான்-சந்ததமு
மான்ற வுலகு மறிவுமறி யாமையுமாய்த்
தோன்றத் துயிலாத் துயில்கொள்வோ-னின்றவனைத்

தென்று மணிவாயிற் காட்டிச் செகம்புகழு
முன்று மிருப்ப துணர்வித்தோன்-கொள்ளைக் (கூ0)
கவற்சிதருஞ் சென்மக் கடலிற் கலந்த
வவிச்சையுவர் வாய்குமுகி லானோ-னிவப்பா
மடங்காப் பரசமய வாத நதிவந்
தடங்கக் கருஞ்சடலு மானோ-னுடம்பிற்
புணர்க்க வொருகிரணம் போல வெனையுங்கொண்
டணைக்கு மணிகிரண மானோன்-பணைக்கும்
விசைப்பூ தலவுசன் மீதிலிருப் போனு
மசைப்போனுந் தானாகு மண்ண-லிசைத்திசைத்
தூண்பிடிக்கும் வேட னொருபார்வை யானாலு
மான்பிடிக்க வந்த வகையென்னத்-தான்பிடித்த (கூரு)
வென்பிறவி யெண்பத்து நான்குநூ றாயிரமுந்
தன்பிறவி பத்தாற் றணித்திடுவோன்-முன்புபுகழ்த்
தேத்திவர நீங்கா திருக்கையா லேகேச
வாத்திரி யென்னு மணிபெற்றுக்-கோத்திரமாம்
வெங்காத் திரஞ்சேர் விலங்குகளை மாய்த்திடலாற்
சிங்காத் திரியென்றுஞ் சீர்மருவி-யெங்கோமான்
மேய்த்த நிரைபோல வெற்புகளெல் லாஞ்சூழ
வாய்த்த நிரையிலொரு மால்விடையாய்ப்-பார்த்திடலா
வின்னிய மார்க்கு மிடபகிரி யென்னும்பேர்
மன்னிய சோலை மலையினோ-னெந்நாளும் (௬00)
பொற்சிலம்பி லோடுசாம் பூநதம்போன் மாணிக்க
நற்சிலம்பா றோடு நதியினான்-கற்சிலம்பி
லிந்திரன் போலு மிடபா சலமவன்மேல்
வந்தவிழி போலும் வளஞ்சுனைசன்-முந்துதிரு
மாலுடையா தோளின் மணிமார்பின் முத்தாரம்
போல வருநூபுர நதியான்-சீலமுறு

பன்னிரு செந்தமிழ் நாடுகளும் பார்மகட்கு
முன்னிருகை காது முலைமுகங்கால்-பின்னகங்கள்
காட்டு மவற்றுட் கனகவரை மீதுபுகழ்
தீட்டும் புனனாடுந் தென்னாடு-நாட்டமா
மந்நா டிரண்டி லருள்சேர் வலக்கணெனு
நன்னாடாந் தென்பாண்டி நாட்டினான்-பொன்னுருவச்
சந்த்ரவடி வாஞ்சோம சந்திரவி மானத்தை
யிந்திரவி மான மிதுவென்று-மந்த்ரவிரு
துக்கொடி யேற்று துசத்தம்பம் வல்லிசா
தக்கொடி யேறுகற்ப தாருவென்று-மிக்கோர்க்
கொருவாழ்வா னானை யுபேந்திர னென்றுந்
திருமாலை யாண்டானைத் தெய்வ-குருவென்று
நண்ணிய சீர்பெற்ற நம்பி முதலோரை
விண்ணவர்கோ னாதி விபுதரென்று-மெண்ணுதலா
லார்பதி யான வமரா பதிபோலுஞ்
சீர்பதி யான திருப்பதியான்-மார்பிடத்தி
லெண்ணுங் கலனிறத்தா லிந்திரவிற் போற்பசந்
வண்ணந் தருதுளப மாலையா-னுண்ணின்
றுருக்கும் வயிணவர்த மோங்குமதம் பொங்கத்
திருக்கொம்பு தான்றுதிக்கை சேர-நெருக்கிய
பாகமொத்த வைகா னசம்பாஞ்ச ராத்திரமா
மாகமத்தி னோசைமணி யார்ப்பெடுப்ப-மோகமுறு
மட்டும் பிணிக்கும் வடகலையுந் தென்கலையுங்
கட்டும் புரசைக் கயிறாக-விட்டுவிடா
வானந்த மான மலர்த்தா ணடத்துசெவிக்
கானந்த மீந்தகளி யானையான்-றானந்த
வர்க்கத் துடனெழுந்து வாயி னுரைகடந்து
கற்கி வடிவுநலங் காண்பித்துச்-சொற்கத்தி

லேறுங் கதிகாட்டி யெய்தி மருத்தோற்றி ௬
வீறும் பலகலையும் வென்றோட்டி-யாறங்கஞ்
சாற்றிய நன்னெங்க மாய்க்கொடுபொற் றூரணியிற்
போற்றிய வேதப் புரவியான்-பாற்கடலிற்
புக்கதொரு மந்தரமும் பூமியு நெம்பரமுஞ்
சக்கரமும் போலத் தலைசுழன்று-தொக்கவிசை (௧௨0)
வற்றும் பொழுதுவிடா வாசுகியஞ் சேடனையும்
பற்றுங் கருடப் பதாகையான்-சுற்றியதன்
குன்றிலரி யுங்கரியுங் கொண்மூவு நின்றதிர
முன்றி லதிர்மும் முரசினோ-னென்று
மவனசை யாம லனுவசையா தென்று
தவநிலை யானை தரித்தோ-னவநீத
மேனியிற் சிந்தியது மென்கையி லேந்தியதும்
வானி லுடுவு மதியுமெனத்-தானுண்டோன்
செங்கதிரும் வெண்கதிரு மென்னத் திருவிழியுஞ்
சங்கமுஞ் சக்கரமுந் தாங்கினோ-னங்கனுல (௧௨௫)
குண்டசனி வாய லுறையுந் திருவயிற்றான்
கொண்ட படியீன்ற கொப்பூழான்-மண்டி
யளந்ததிருத் தாளா னன்றேற்ற கையான்
விளைந்த பொருள்காட்டு மெய்யா-னுளர்ந்தவினை
முட்டறுக்குந் தன்னுமை முன்னித் திருநாம
மிட்டவருக் கிவோ விகபரங்க-ளெட்டெழுத்தாம்
பிஞ்செழுத்தாய் நையும் பிரம லிபியெனும்பே
ரஞ்செழுத்தை மூன்றெழுத்த தாக்குவோ-னஞ்சலியாய்த்
தங்கள்குன் றத்திருந்து சங்கர ஞாதியோர்
நங்கள்குன் றென்றுவரு நண்புடையோ-னங்கோர் (௧௩0)
வயமுனிக்குக் கண்ணிரண்டு மாற்றினோன் போற்றுங்
கயமுனிக்குக் கண்கொடுத்த கண்ண-னயமுரைக்கி

லஞ்சுபடை யோனென்று மஞ்சாம லங்கையில்வா
சஞ்செய்யு முத்யோகச் சக்கரத்தா-னெஞ்சாது
விண்ணிலங்கு தென்னிலங்கை வெற்றியாய்க் கொண்டாலு
மண்ணிலங்கை தானமாய் வாங்குவோன்-பண்ணிலங்கு
மேரணியும் பொன்னரங்கத் தெம்பிரான் போலெவர்க்குந்
தாரணி நல்காத தம்பிரான்-சீரணியுஞ்
செங்கைத் தலத்திடத்துந் தென்மதுரை யூரிடத்துஞ்
சங்கத் தழகனெனுந் தம்பிரா-னெங்குந் (௧௩௫)
திருப்பாற் றிக்குஞ் செழுங்கருட னுக்கு
மிருப்பாது கைக்குமர சீந்தோன்-விருப்பமுறுஞ்
சந்திர னனை சவுந்தர வல்லியுடன்
சுந்தர ராசனெனத் தோன்றினோ-னந்தஞ்
சொரிநலங்கொ டோளழகன் சுந்தரத் தோளன்
மலையலங் காரனென வந்தோன்-பலவிதமாய்
நண்ணியதெய் வத்தை நரரெல்லாம் பூசிக்க
புண்ணியமே தன்னைவந்து பூசித்தோன்-கண்ணனைய
பாத கமலம் பரவுமலை யத்துவசன்
பாத கமலம் பறித்திடுவோன்-கோதி (௧௪௦)
லரணும் புயங்கனுறு மம்பரி டர்க்குச்
சரணும் புயங்க டருவோன்-திருநாளிற்
சந்தக்கா லூடு தவழ்ந்துவரு தென்றற்கான்
மந்தக்கா லாக மருவுங்கால்-சிந்திக்கும்
வாடைத் துளிபோன் மலர்த்தேன் றுளிதுளிக்குங்
கோடைத் திருவிழாக் கொண்டருளி-நீடுவிடைக்
குன்றிலுற்ற வெள்ளங் கொழுந்தோடி வைகைதனிற்
சென்றெதிர்த்து நிற்பதெனச் சீபதியோ-னன்றெதிர்த்துக்
கூடலிற் கூடலெனுங் கூடற் றிருநகரி
லேடலர் தாரா னெழுந்தருளி-யாட லுடன் (௧௪௫)

நல்லார் குளங்க டரையிற் பணிவார்முன்
றல்லா குளம்வந்து சார்ந்தருளி-மெல்ல
நரலோக மீது நடந்துவரு மென்ற
பரலோக மென்றுசிலர் பார்க்கச்-சுரலோகத்
திந்திரவி மான மிதுவென்று மிச்சோம
சந்திரவி மானமிது தானென்று-முந்தியவட்
டாங்கவி மான மவையிரண்டு மென்னவே
தாங்குவி மானந் தனிற்புகுமுன்-றீங்கில்லா
முன்னிவி மானத்தை யுற்றெடுக்கும் போதனந்தன்
சென்னிமணி யொன்று தெரித்தெழுந்த-தென்னவே (௧௫௦)
யும்பரில் வெய்யோ னுதயஞ் செயக்குதிரை
நம்பிரா னேறி நடந்தருளி-யம்பரத்திற்
கோடி கதிரோனுங் கோடி பனிமதியு
மோடி நிரையா யுதித்ததெனா-நீடிய
பொற்குடையும் வெள்ளிக் குடையும் பொலிந்திலங்க
விற்கொடிகள் விண்ணோர் வியர்துடைப்பச்-சொற்கத்
தியலுங் கரியுமதி லெற்று முரசும்
புயலு முருமேறும் போலக்-கயலினத்தை
யள்ளுந் திரைவைகை யாறு பரந்தநீர்
வெள்ளங் கரைகடந்து மீதூர-வள்ள (௧௫௫)
திருந்தரு மேகம்போற் செல்லுதலா னீர்பூந்
துருத்தி மழைபோற் சொரியக்-கருத்துடனே
வாட்டமாய் வந்து வரங்கேட்கு மன்பருக்குக்
கேட்டவர மூறுங் கிணறுபோ-லூட்டமுடன்
காணிக்கை வாங்கவன்பாய்க் கைக்கொட்டி யள்ளியிட
வாணிப்பொன் கொப்பரைமுன் னாகவரக்-காணீர்
புரந்தரற்கு நேரிதென்று போற்றிசைப்ப வோரா
யிரந்திருக்கண் வைவைநதி யெய்த-வுரந்தரித்த

வார்மண்டு கங்கை வனம்போல் விளங்குவண்டி
யூர்மண்ட பந்தி லுவந்திருந்து-சீர்மண்டு (கசுo.)
மாயனுக்கு வாகனமாய் வாவென்று சேடனைத்தான்
போயழைக்க வெய்யோன் புகுந்திடலுந்-தூயோன்
மருளைப் பகலை மறைத்தவ னிப்போ
திருளைப் பகல்செய்தா னென்னத்-தெருளவே
யங்கிக் கடவுளவ னன்பருட னுடுதல்போற்
றிங்கட் கடவுள்சே விப்பதுபோற்-கங்குல்
கரதீப மும்வாணக் காட்சியுங் காண
வரதீப ரூபமாய் வந்தான்-திருமா
லவனி பரிக்கு மனந்தாழ்வான் மீது
பவனிவரக் கண்டு பணிந்தே-னவனழகு (கசுரு)
பின்னழகு மின்னழகு பேரழகைக் காணுமுன்னே
முன்னழகைக் கண்டியான் மோகித்தேன்-றன்னழகைத்
தானேகண் டாலுந் தனக்குத் தயர்வருமென்
றேனோரை நோக்கி யெழுந்தருள-லானேன்
விமலத் திருமுகமு மெம்பிரான் மேலுங்
கமலத் திருமுகமுங் கண்டே-னமல
னரவணையா னென்பதுமுண் டண்ணலரன் போல
விரவணையா னென்பதுமுண் டேனும்-பரவைத்
திருவணையா னென்றுதினஞ் செப்புவது பொய்யென்
றுருவணைய மாதர்க் குரைத்தேன்-மருவணையுஞ் (கஎo)
செங்கரத்தி லன்று திருடியவெண் ணெய்போலச்
சங்கிருக்க வென்சங்கு தான்கொண்டீர்-கொங்கை
மலையருவி நீருமக்கு மாலிருஞ் சோலைத்
தலையருவி நீர்தானோ சாற்றீர்-விலையில்லாப்
பொற்கலை யொன்றிருந்தாற் போதாதோ வன்றுபுனை
வற்கலையி லேவெறுப்ப வந்ததோ-நற்கலை

ஞாரஞ்சேர் கொங்கைக் களித்த தறியீரோ
சோரந் திரும்பத் தொடுத்தீரோ-வீரஞ்சேர்
நூலாடை யாமெங்க ளுண்ணிடைய தாமுமக்குப்
பாலாடை யா'மா பகருவீர்-மாலாகி (கஎ௫)
மொய்த்திரையு மெங்கள் மொழிகேட்பீர் பாற்கடலி
னித்திரைதான் வேகவதி நீரிலுண்டோ-வித்தரையிற்
பொங்குநிலா வெள்ளம் பொருந்திற்ரு பாற்கடரு
னங்குநிலா தும்மோ டணைந்ததோ-கங்குலெனு
மானையுங் கொண்டுசந்த்ர ஞாலதன் மேல்வருவீர்
மீனையுநீர் விட்டு விடலாமோ-வானச்
சதிரிள மாதர் தமக்கிரங்கு வீர்நெஞ்
சதிரிளமா தர்க்கிரங்க லாகாதோ-முதிர்கன்றைக்
கொட்டத்து வெண்பால் குனிந்துகண்ட வார்முலையில்
விட்டுக் கறப்பதையும் விட்டீரோ-கிட்டப்போய் (க௮0)
மென்பா றெரித்த வியன்முலையைப் பாற்குடமென்
றன்பா லெடுத்த தறியீரோ-மின்போல்வார்
செவ்விதழின் மீதே தெரித்தவெண்ணெ யுண்பார்போ
லவ்விதழை யுண்ப தறியீரோ-செவ்விதழைக்
குன்றன் றெடுத்தீர் குளிரவமு துங்கடைந்தீர்
சென்றன்று பாம்பிளடங் செய்தீரே-யென்றுரைப்பக்
கொண்டபஞ் சாயுதமேற் கொள்கையோ னற்றேனூர்
மண்டபஞ் சார்பாய் வலம்வந்து-பண்டை
விரசையுடன் வைகுந்த வீடுமிது வென்னப்
புரசைமலை காத்தோன் புகுந்தான்-வரிசை (க௮௫)
யுபசாரங் கொண்டருளி யோர்சிவிகை மீது
தபசாருஞ் சேபதியைச் சார்ந்தா-னிபமுண்ட
வெள்ளிற் கனியானேன் வேதனை யீன்றவன்ற
னுள்ளிற் கனிவா யுகந்தவரும்-பிள்ளைமதி

செவ்வை மதியோ திரைக்கடலின் வாய்ப்பிறந்தோ
கொவ்வையித ழார்மொழிதான் கூற்றன்றோ-வெவ்வழுறுங்
காற்றேறி னுமொரு காவலனன் றேயுருக்கி
யூற்றுந சேமணியு மொன்றுண்டோ-வேற்றுக்
கிளையோடும் வாடிக் கிடந்தாலுஞ் சுட்டுத்
துளையாக் குழலுமுண்டோ சொல்லாய்-கிளியரசே
யென்கூடு முன்கூடா மிந்த விறத்திறு
னுன்கூடு மென்கூடு மொன்றுசகா-வென்கூட்டின்
மாங்கனி யுண்டு வளஞ்சேர் செழுங்கோவைத்
தீங்கனியுண் டாமதினற் பீனியுண்டு-பாங்கிற்
குழையுமன முண்டு குழம்பிய பாகுண்
டுழையதே னும்பாலு முண்டு-விழைவையறிந்
தூட்டுவே னுன்னை யுருப்பசியா வெண்ணிலவுங்
காட்டுவேன் பட்டாடை யாற்றுடைப்பேன்-கூட்டி
லரைசா யிருத்தியா லாலத்தி சுற்றிப்
புரைதீர் நறையும் புகைப்பே-னருகினிலே
யீசன் திருநாம மெல்லாமென் போலுனக்குப்
பாசந் தொலையப் பயிற்றுவேன்-பேசென்
றிளவெயிலிற் காயவைத் தேயொருகான் முத்து
வளைபயி லங்கையின்மேல் வைத்துத்-துளவணியி
லீடுபட்ட வெள்ளை யெகினத்தைத் தூதுவிட்டென்
சூடுபட்டார் பின்றுணிந்து சொல்வாரோ-கூடுசட்டி
யன்பாய் வளர்த்தெடுத்த வாய்க்குதவாக் கோகிலந்தா
னென்பா லருள்வைத் தியம்புமோ-தன்பே
ரரியென்று சொன்னா லளியென்று சொல்லும்
வரிவண்டு பேசி வருமோ-விரகஞ்செய்
வன்கால திக்கின் மலைவா யிருக்கின்ற
தென்காலு மென்காதல் செப்புமோ-பொன்காதல்

வண்டலையுந் தாரான்முன் மாதரையெல் லாந்தூறுங்
கொண்டலையுந் தூதுவிடக் கூடுமோ-வுண்ட
படியேழுங் காக்கும் பரங்கருணை யார்முன்
கொடியாரும் போவாரோ கூறு-யடியார்க
ளங்கிருந்தா னீங்குந் தனஞ்செய்வாய் நாய்ச்சியார்
பங்கிருந்தாற் கையிற் பறந்திருப்பா-யெங்கிருந்து
வந்தாயென் றுன்மா லிருஞ்சோலை மாமலைநின்
றெந்தா யுனைத்தொழவந் தேனென்பா-யந்தச் (உ0ரு)
சவுந்தர வல்லியெனுந் தற்சொரூப வல்லிக்
குவந்தலர்சூ டிக்கொடுத்தா ளுக்குஞ்-சிவந்த
கடுகிலே சங்கோபங் காணும லென்மால்
வடுகிலே சொல்வாய் வகையா-யடுகிலே
சங்கெடுப்பான் சங்கெடுப்பான் சச்சிதா னந்தனிடங்
கொங்கெடுக்குந் தாமங் கொடுவருவா-யங்கேகி
யோருகத்தி லாலாகி யோருகத்தி லேயரசா
யோருகத்தில் வில்வ வுயர்தருவா-யோருகத்திற்
புத்திர தீபமுமாய் புங்கவர்க்கா குந்தருவாய்ச்
சத்தி தருமோர் தருவுண்டு-மொய்த்த (உச0)
வொருகோடி காவுண் டொருகோடி யாறுண்
டொருகோடி பூஞ்சுனையு முண்டு-திருமா
லறங்காக்கும் யோகிகள்போ லல்லும் பகலு
முறங்காத் திருப்புளியு முண்டு-திறஞ்சேர்
பிதாமக னேடுமிறையும் பெற்றி விளங்கப்
பிதாமகன் வந்துபுகழ் பேசச்-சதாகால
முந்திரமாய் வாழு முபேந்திரனங் கில்லையென
விந்திரனார் வந்தங் கினிதிறைஞ்சப்-பிந்திய
தம்பியுடன் மூவருக்குந் தானே யரசீந்த
நம்பிதிருத் தாளை நம்பியே-வெம்பிறவித் (உசரு)

தேகம் பவித்திரமாஞ் சீரங்க ராசபட்ட
ராகும்ப்ர சித்தரா மர்ச்சகரு-மோமுறு க
கங்குன் மலமாயக் காம்பு வழுக்காமற்
செங்கையி லேய்ந்ததிரி தண்டேந்திச்-சங்கையறச்
செய்யுந் திருமா லிருஞ்சோலைச் சீயரொடு
வையம் விளங்குமமு தாரும்-பொய்யில்லா
ஞானதீ பங்காட்டி நன்னெறிகாட் டென்றுருவ
மானதீ பங்காட்டி வந்துநின்று-மேனுளின்
முத்த மிட்டுப் பின்போவார் முன்பாகப் பின்போன
வத்தன் திருமாலை யாண்டானும்-பத்தியினல் (உஉ0)
வையங்கார் வண்ணனையே வாழ்த்து திருத்தோழப்
பையங்கா ரென்னுமா சாரியரு-மெய்யன்பாஞ்
சிட்டர்க டேவ கணங்க டினம்பரவும்
பட்டர்க ளாம்வேத பாரகரும்-விட்டுவெனுஞ்
சோதிகரு ணைக்கடலிற் றோன்றிக் ககராச
னாதியுடன் வந்த வமுதாரும்-கோதிலாத்
தண்ணந் துழாய்மாலை தாங்குந் திருமலைபோ
னண்ணுந் திருமலை நம்பிகளு-முன்னின்ற
மாலைமலை சோலை மலைதனையே யொத்ததாற்
சோலைமலை நம்பியெனுந் தூயோனு-மேலின் (உஉ௫)
விரிஞ்சன் முதலோர்க்கும் விண்டுபிர சாதந்
தருஞ்சட கோபநம்பி தானும்-பெருஞ்சீர்
வரியெழுதிக் கற்றதிரு மாலிருஞ் சோலைப்
பிரிடரெனுஞ் சொக்கருணைப் பெருங்-கரியினைமுன்
னுஞ்ச கருணை யரசே யருளெனவெந்
நாளுஞ்சீ காரியஞ்செய் நாயகருந்-தாள்வணங்கி
யார்த்ததிரு வோலக்க மாயிருப்ப ரப்போதன்

வார்த்தை திருச்செவியில் வாயாது-சேர்த்தியிலே
மெல்ல வெழுந்தருளும் வேளைபார்த் தவ்வேளை
சொல்லி யெழுந்தருளச் சொல்லாமுன்-வெல்லுமத (உ௯0)
னம்பலர் தூது மடுத்து வருமுன்னே
வம்பலர் தூது வருமுன்னே-கும்பமுனி
வாயி னுரையடங்க வந்த கடலடங்கத்
தாயி னுரையடங்கத் தத்தையே-போய்வந்தா
னுன்பேர் சுவாகதமென் றோதுகையா லென்றனக்கு
மன்பே சுவாகதமென் றாகுங்காண்-முன்பொருநாள்
கோசலை கையிற் குரிசி லுனைப்புகழ்ந்து
பேசி லுனைப்புகழ்ந்து பேசாரார்-நேசமுட
னென்னுடைய மாலை யிருபுயத்தின் மாலைகே
டன்னுடைய மாலைதனைத் தாராதே-லன்னைதிருக் (உ௯௫)
கோதையார் சூடிக் கொடுத்து வரவிட்ட
தாதையார் மாலை தனைக்கேளாய்-நீதி
யடுப்பவன் யாவருக்கு மான தியாகங்
கொடுப்பவ னில்லையென்று கூறுன்-றடுக்கு
மருமாலை நீக்கு மழகன் புயத்து
மருமாலை நீவாங்கி வா.

## அழகர் கிள்ளை விடு தூது

முற்றிற்று.

அழகர் திருவடிகளே சரணம்.